# தெய்வ அரசு கண்ட இளவரசன்




நாரா நாச்சியப்பன்



# தெய்வ அரசு கண்ட இளவரசன்

(புத்த பெருமான் வரலாறு)

நாரா நாச்சியப்பன்



தமிழாலயம்

232, பைகிராப்ட்ஸ் தெரு :: சென்னை-14.

# பதிப்புரை

போதி மரத்தடியில் ஞான மடைந்த மாதவச் சுடர் மணிதான் புத்த பெருமான். இன்ப வாழ்வு நிறைந்த அரண்மனையிலே பிறந்து அரசபோகத்தை அனுப வித்து வளர்ந்த புத்த பெருமான் ஞான மார்க்கத்தில் செல்ல நேர்ந்ததே, அவருடைய 'தன்னைப் போல் பிறரையும் எண்ணும்' சமத்துவ தத்துவம் தான். பிறர் துயர் கண்டு பொறுக்காத அவ ருடைய நெஞ்சம்தான் தம் சுக போகங் களை யெல்லாம் துறந்து காட்டுக் கேகும்படி செய்தது.



உலக மக்கள் உவப்புடன் வாழ ஓர் ஒளிவழியைக் கண்டு பிடித்த அந்தத் திலகத்தின் வாழ்க்கை வர லாறு கல்வி கற்கப் புகும் மாணவ மாணவிகளுக்கும் ஓர் ஒளிவழியைக் காட்டும் திறன்படைத்ததாகும். கற் பார் கருத்தை ஈர்க்கும் வண்ணம், சிறந்த செந்தமிழ் நடையில் ஆசிய ஜோதியாம் அண்ணலின் வாழ்க்கையை சிறப்புற ஆக்சித் தந்துள்ளார் திரு நாரா நாச்சியப்பன்!

சிறுவர் சிறுமியார் விரும்பிப் படிக்கும் சிறந்த எழுத்தாளர்களிலே ஒருவர் திரு நாரா நாச்சியப்பன். அவர் புத்த பெருமானின் வாழ்க்கை வரலாற்றை நல்ல தமிழில், நாடு போற்றும் வண்ணம் நம் தமிழ்ச் சிறுவர் சிறுமியர் கற்றுச் சிறக்கும் வண்ணம் ஆக்கி யளித்திருக்கிறார்.

தவப் பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகளை யும், சிறந்த கட்டுரை கதைகளையும் தம்மக்கள் பெற்றுப் படித்து மகிழ உதவ வேண்டியது தமிழ்ப்பெற்றோர், ஆசிரியர் தம் கடமையாகும்.

தமிழாலயத்தார்

## 1. வீரர் குலம் விளங்கவந்த திருவிளக்கு

மாமன்னர் சுத்தோதனருடைய அரண்மனை விருந்துமண்டபம் கலகலப்பாக இருந்தது. சாக்கிய குலத்தின் வழிவந்த மாவீரர் களும், சுத்தோதன மாமன்னரின் நெருங்கிய உறவினர்களும்தான் அங்கு கூடியிருந்தனர். வெளியார் யாருமில்லை.

அன்று விருந்து வைக்க வேண்டும் என்று எவ்விதமான முன்னேற்பாடும் செய்யப்பட வில்லை. எனவே உணவு வகைகள் சிறப்பாகத் தயாரிக்கப்படவில்லை. எதிர்பாராத விதமாக உறவினர்கள் அன்று கூடினார்கள். அப்போ தைக்குச் செய்ய முடிந்த வரையில் உணவு களைத் தயாரித்து அரண்மனைச் சமையல் காரர்கள் விருந்தை நடத்தி விட்டார்கள்.

விருந்து முடிந்து கூடத்தில் எல்லோரும் உட்கார்ந்திருந்தார்கள். எதிர்பாராது ஒன்று கூடிய தன் உறவினர்களுடன் அளவளாவிக் கொண்டு அமர்ந்திருந்தார் மாமன்னர்.

விருந்தினர்களிலே மாமன்னரின் தம்பி மார்கள் இருந்தார்கள், மைத்துனன்மார்கள் இருந்தார்கள். தூரத்து உறவினர்கள் இருந் தார்கள். மாமன்னரின் படையிலும், அரண்மனை அலுவலிலும் அமர்ந்து பணியாற்றியவர்களும் இருந்தார்கள். எல்லோரும் வீரசாக்கிய குலத் திற் பிறந்த மறவர்கள். தோள்வலியிலும் வாள் வலியிலும் சிறந்த மாவீரர்கள். சாக்கிய குலத் தினரின் வெற்றிக்கொடி இறங்காது காத்து வரும் ஆண் சிங்கங்கள். கபிலவாஸ்துப் பேரர சைக் கட்டிக் காத்து நின்ற காளைகள்.

தன் உறவினர்கள் எல்லோரும் எதிர் பாராது ஒன்றுகூடிய அந்த நிகழ்ச்சியை எண்ணி யெண்ணி இறும்பூதடைந்தார் சுத் தோதனர்.

இன்பமாகப் பேசிக்கொண்டிருந்த போது சுத்தோதனரின் கூடப்பிறந்த தம்பியொருவன் எதிர்பாராத விதமாக ஒரு பேச்சைக் கிளப்

பினன். அவன் கேட்ட அந்தக் கேள்வி சுத்தோதனருடைய உள்ளத்திலே பெருஞ் சிந்தனையை உருவாக்கியது. மகிழ்ச்சியாகப் பேசிக் கொண்டிருந்த அவருடைய மனத்திலே ஒரு கலக்கம் ஏற்பட்டது. அந்தக் கலக்கத்தின் பிரதிபலிப்பு அவருடைய அகன்ற நெற்றியிலே சுருக்கங்களாக வெளிப்பட்டது.

அந்தக் கேள்வியை வேறு யாரும் கேட்டிருந்தால், அரசர் ஆணை பிறப்பதற்கு முன்னலேயே அவர்கள் அப்புறப் படுத்தப்பட்டிருப்பார்கள். ஆனல், கேட்டவர் மாமன்னருடைய கூடப் பிறந்த தம்பி என்பதால் யாரும் எவ்வித அசம்பாவிதமான செயலும் செய்யவில்லை. மேலும் அங்கு கூடியிருந்த உறவினர் எல்லோருக்குமே நெடுநாட்களாக அந்தக் கேள்வி மனத்திற்குள் உறுத்திக் கொண்டு நின்றது தைரியமிருந்திருந்தால் அவர்களே மாமன்னரைக் கேட்டிருப்பார்கள். அப்போது மாமன்னரின் தம்பியே கேட்டுவிட்டது கண்டு அவர்கள் மனத்திற்குள் திருப்தியடைந்தார்கள் என்றே சொல்லவேண்டும்.

பலபேருடைய மனத்தை உறுத்திநின்ற ஒரு கேள்வியை எந்தனை நாளைக்குத்தான் மூடி

மறைத்து வைக்க முடியும். அன்று மாமன்னரின் தம்பி கேட்காமல் விட்டு விட்டால், பிறகு வேருெரு நாள் யாராவது ஒருவர் கேட்காமலா விட்டுவிடப் போகிருர்கள். அணைக்கடங்காத வெள்ளம் என்ருவது ஒரு நாள் உடைப் பெடுத்துக் கொள்ளத்தானே செய்யும்?

அப்படி மாமன்னர் கவலைக்குள்ளாகும்படி அவர் தம்பி கேட்ட கேள்வி என்ன என்று அறிய ஆவல் பிறப்பது இயற்கை தானே! தம்பி கேட்ட கேள்வி இதுதான்.

"அண்ணு, சித்தார்த்தன் பெரியவளுகி விட்டான். திருமணமும் ஆகிவிட்டது. இன்னும் சின்னப் பிள்ளைபோல் இருந்தால் என்னுவது? என்றும் அந்தப்புரமே கதியென்று கிடந்தால், சாக்கிய குலத்தின் வீரமெல்லாம் மங்கிப் போகாதா? நான் துணிந்து சொல்வதற்காக மன்னிக்க வேண்டும். வீரனுக வளர வேண்டிய பிள்ளையை நீங்கள் அளவுக்கு மிஞ்சிச் செல்லம் கொடுத்து ஆகாவரியாக்கிக் கொண்டு வருகிறீர்கள்!"

மூச்சு விடாமல் தம்பி கேட்ட கேள்வி சுத்தோதன மாமன்னரின் செவிவழியே புகுந்து

சிந்தையைக் கலக்கியது. அவர் பதில் ஏதும் பேசவில்லை

சுத்தோதனரின் மனத்திரையில் பழைய நிகழ்ச்சிகள் எல்லாம் சித்திரப்படங்கள் போல் வரிசையாகக் காட்சியளிக்கத் தொடங்கின.

இரண்டு மனைவியர் இருந்தும் தனக்கு ஒரு பிள்ளை பிறக்கவில்லையே என்று சுத்தோதனர் கவலையோடிருந்த காலம் அது. ஒருநாள் மாயா தேவி அவரிடம் வந்து, தான் கண்ட கனவைப் பற்றிக் கூறியபோது அவர் எவ்வளவு உணர்ச்சி யடைந்தார்.

மாயாதேவியைச் சுற்றிலும் மக்கள் கூடி நின்றார்களாம். அவளைப் பார்த்து எல்லோரும் பயபக்தியோடு கையெடுத்துக் கும்பிட்டார் களாம். கடவுளைக் கண்டுவிட்டதுபோல் அந்த மக்கள் முகங்களிலே ஆனந்தக்களை கூத் தாடியதாம்.

இப்படி ஒரு கனவு மாயாதேவி கண்டிருக் கிறாள். இந்தக் கனவுக்கு ஏதோ பொருள் இருக்க வேண்டும் என்று தோன்றியது சுத்தோ தனருக்கு.

மாயாதேவியை மக்கள் பலர் கூடி பய பக்தியோடு வணங்குவதென்றால் அதன் பொருள் என்ன? மாயாதேவி மிக உயர்ந்த நிலையை அடையப் போகிறாள் என்று எடுத்துக் கொள்ளலாம். ஆனால், மாயாதேவி இப்போது தான் பேரரசியாக இருக்கிறாளே! இதற்குமேல் ஒருநிலை அவளுக்கு எங்கே வரப்போகிறது?

சுத்தோதனர் நினைத்து நினைத்துப் பார்த்தார். அவர் அறிவுக்கு எதுவும் எட்டவில்லை. இந்தக் கனவின் பொருள் தெரியவேண்டும் என்றால், கற்ற பேரறிஞர்களையும் அனுபவத்தால் முதிர்ந்த பெரியார்களையும் அறிஞர்களையும் கேட்டுப் பார்த்தால்தான் ஆகும்.

நாட்டில் உள்ள சான்றோர்களையும் அறிஞர்களையும் பெரியவர்களையும் அவையிலே கூட்டினார் சுத்தோதனர். யாருக்கும் இந்தக் கனவின் பொருள் புரியவில்லை. ஒரு சிலர் சொன்ன பொருள் சரியென்று படவில்லை. அர்த்தமில்லாத கனவாகவே அது போய்விடும் போலிருந்தது.

கூட்டத்தின் இடையிலிருந்து ஒரு கிழவர் எழுந்து அரசர் முன்னே வந்து நின்றார். அரசியை நோக்கி அவர் பேசினார்.

"அருள் நிறைந்த அரசியே! உன் கனவு மகிழ்ச்சிக் குரியதே! உனக்கொரு பிள்ளை பிறக்கப் போகிருன். அந்தப் பிள்ளை பேராற்றல் பொருந்தியவனுக இருப்பான். இந்த அளவிற்குத் தான் நான் உறுதியாகக் கூறமுடியும். ஏனெனில் அவன் பெரியவனுவதற்கு இரண்டு வழிகள் இருக்கின்றன. அரண்மனை வாழ்விலே அவன் நிலைத்திருந்தால் ஒரு பெரிய மாவீரனுகத் திகழ்வான். நாடுகள் பலவற்றை வென்று மிகப் பெரிய வெற்றி வீரனுக விளங்குவான். ஆனுல், அவன் கானக வாழ்வை நாடிச் செல்லவும் கூடும். அவ்வாறு சென்றுலும் உலகம் வணங்கும் ஓர் ஒப்பற்ற ஞானியாகத் திகழ்வான். உலகிற்கு வழிகாட்டும் ஓர் ஒளி விளக்காக விளங்குவான்" என்று சொல்லிவிட்டு அந்தக் கிழவர் கூட்டத்திற்குள்ளே புகுந்து மறைந்துவிட்டார்.

அந்தக் கிழவர் சொல்லிய ஒவ்வொரு சொல்லும் மாயாதேவி கண்ட கனவுக்குச் சரியாகப் பொருந்தி யிருந்தன. அவருக்குத் தகுந்த பரிசு கொடுக்க வேண்டும் என்று சுத்தோதனருக்குத் தோன்றியது. ஆனுல், அந்தப் பெரியவர் அகப்பட்டால் தானே!

சுத்தோதனர் பிறகு இந்த நிகழ்ச்சியை மறந்துவிட்டாலும், மீண்டும் நினைத்துக் கொள்ளும்படியான நேரங்கள் எத்தனை முறை வந்து விட்டன. ஒவ்வொரு முறையும் அவர் அடைந்த மனத் துயரத்திற்கு அளவுண்டா?

சரியாக ஓராண்டுக்குப் பிறகு நிறைந்த வயிற்ருேடு மாயாதேவி தன் தாய்வீட்டுக்குப் புறப்பட்டாள். அப்போது எவ்வளவு மகிழ்ச்சியோடு சுத்தோதனர் அவளைப் பல்லக்கில் ஏற்றி அனுப்பிவைத்தார்! ஆனல் போகும் வழியிலேயே, லும்பினி என்ற காட்டின் நடுவே மாயாதேவி பிள்ளையைப் பெற்றெடுத்தாள். இந்தச் செய்தியை அறிந்ததும் சுத்தோதனர் ஆவலோடு காட்டிற்கு விரைந்து சென்ருர். தாயையும் பிள்ளையையும் அரண்மனைக்கு அழைத்து வந்தார். என்ன அழகாக இருந்தது அந்தப் பிள்ளை. எத்தகைய கவர்ச்சி யிருந்தது அந்தப் பிள்ளையின் முகத்திலே. தன் பிள்ளை என்பதையும் மறந்து சுத்தோதனருடைய கைகள் தாமாகக் குவிந்து அந்தப் பிள்ளையை வணங்கினவே, அதன் பொருள் என்ன?

பிள்ளை பிறந்த ஏழாவது நாள் எதிர்பாராத விதமாக மாயாதேவி இறந்து போனுள். அப்

போது தான் சுத்தோதனருக்கு அந்தக் கிழவருடைய மொழிகள் நினைவுக்கு வந்தன.

அவன் கானக வாழ்வை நாடிச் செல்லவும் கூடும் என்றாரே அந்தப் பெரியவர். தன் பிள்ளை கானக வாழ்வுக்காகப் பிறந்தவன் என்பதற்காகத் தானோ காட்டில் பிறந்தான்? அவன் பந்த பாசமற்றவன் என்பதற்காகத் தானோ பிறந்தவுடன் தாயை இழந்தான்.

இப்படியெல்லாம் நினைக்க நினைக்க சுத்தோதனருடைய தலை சுழன்றது.

தன் குல விளக்காகத் திகழ வேண்டிய பிள்ளை கானகந் தேடிப் போய்விட்டால், தன் முன்னோரும் தானும் தேடி நிலை நிறுத்திய பேரரசு என்னாவது? தங்கள் குலமும் புகழும் என்னாவது? எல்லாம் மண்ணோடு மண்ணாக வேண்டியதுதானா?

முடியாது! முடியவே முடியாது!

தன் பிள்ளை அரசனாகத்தான் வாழ வேண்டும். விதி எப்படி இருந்தாலும் சரி! அதை வென்றுதான் ஆக வேண்டும். இனி

ஒவ்வொரு கணமும் என் மகனின் வாழ்க்கைப் பாதையைச் சரி செய்வதில்தான் என் கவனத்தைச் செலுத்த வேண்டும். அவன் ஒரு மாவீரனுகத் திகழ்வதைப் பார்த்துவிட்டுத்தான் நான் சாக வேண்டும்! இப்படி உறுதி செய்து கொண்டார் சுத்தோதனர்.

"பிரஜாவதி! பிரஜாவதி!" என்று கூவி அழைத்தார் மாமன்னர். அவருடைய மற்றொரு மனைவி விரைந்து வந்து பயபக்தியோடு தலை வணங்கி எதிரில் நின்ருள்.

"இதோ பார்! பிரஜாவதி! இனி இந்தப் பிள்ளை உன் பிள்ளை! நீ அவனுக்கு மாற்ருந் தாயல்ல! நீ தான் அவனைப் பெற்ற தாய்! தெரிகிறதா?'

"நான் பெற்ற பேறு, மன்னர் பிரானே!" என்று பணிவன்புடன் கூறினுள் பிரஜாவதி. அன்று கொடுத்த வாக்குறுதியை அவள் கடைசிவரை மீறவேயில்லை. சித்தார்த்தனை அவள் எத்தனை செல்லமாக வளர்த்தாள்! பெற்ற தா்யே அவள்தானென்று நினைத்துக் கொள்ளும்படியல்லவா அவனைப் பேணி வளர்த்தாள். கொண்டவன் குறிப்பறிந்து நடப்பது

பெண்டிர்க் கழகு என்பார்கள். சுத்தோதனர் எப்படி நினைத்தாரோ அப்படியெல்லாம் சித்தார்த்தனை அவள் வளர்த்தாள்.

சுத்தோதனர் ஒருநாள் பிரஜாவதியைத் தனியே அழைத்தார். "பிரஜாவதி! உன்னிடம் ஒன்று சொல்லப் போகிறேன். கவனமாகக் கேள்! சித்தார்த்தனுக்கு ஒரு கவலைகூட வரக் கூடாது. அவன் எதைக் கேட்டாலும் அதைக் கொடுத்துவிட வேண்டும். என்ன செய்யச் சொன்னாலும் அதைச் செய்துவிட வேண்டும். முடிந்தால் அவன் என்ன நினைக்கிறான் என்று தெரிந்துகூட அதைச் செய்துவிட வேண்டும். அவன் சிறிது கவலைப்பட்டாலும் நான் பெருந் துயரப்படுவேன். அவன் அழுகுரல் என் காதில் பட்டால் என் உயிர் உருகி விடும்!"

"மன்னர் பிரானே, நீங்கள் கவலைப்படவே வேண்டாம்! நம்முடைய சக்திக்கியன்றவரை சித்தார்த்தனுக்கு ஒரு கவலையும் ஏற்படாதபடி நான் பார்த்துக் கொள்கிறேன்." என்று நெஞ்சில் கைவைத்துக் கொண்டு சொன்னாள் பிரஜாவதி.

சுத்தோதனர் மனம் அமைதியடைய வேண்டும் என்பதற்காக மட்டும் அவள்

அப்படிச் சொல்லவில்லை. உண்மையாகவே தான் கூறினாள். கூறியபடியே நடந்து கொண்டாள்.

சித்தார்த்தன் செல்லப் பிள்ளையாக வளர்ந் தான். செல்லமென்றால் செல்லம் அப்படிப் பட்ட செல்லம். மாயாவதி இருந்திருந்தால்கூட அப்படிச் செல்லமாக வளர்த்திருக்க மாட்டாள். அவன் வேண்டுமென்று கேட்ட பொருள் கிடைக்கும். அது மட்டுமல்ல, அவன் ஒரு பொருளை விரும்பிப் பார்த்தாலே அது அவனுக்குத் தரப்படும்.

அவன் கண் எதிரில் எந்தவிதமான கோரக் காட்சியும் நிகழக் கூடாது என்பது மாமன்னர் கட்டளை. அரண்மனைக்குள் யாரும் சண்டை யிட்டுக் கொள்ளவோ சச்சரவிட்டுக் கொள் ளவோ கூடாது. மீறி நடந்தால் கடுந் தண்டனை. தாதிமார்கள் சித்தார்த்தனுக்கு பயங்கரமான விளையாட்டு எதையும் காட்டக் கூடாது. பேய்பூதக் கதைகள் பூச்சாண்டி பயமுறுத்தல்கள் எதுவும் அவனெதிரில் பேசக் கூடாது. இப்படிப்பட்ட கட்டுத்திட்டங் களெல்லாம் அரண்மனைப் பணியாளர்களுக்கு விதிக்கப்பட்டன.

அழகான தோற்றமுடைய செவிலிகள் தான் அரண்மனையில் வேலைக்கு வைத்துக் கொள்ளப்பட்டார்கள். சிரித்த முகத்தோடு உள்ளவர்கள்தாம் அந்தப்புரத்திற்குள் அனு மதிக்கப்பட்டார்கள். முகத்தைச் சிணுங்கு பவர்களும், கவலைப்பட்டவர்களும், திருப்தி யில்லாதவர்களும் அழகற்றவர்களும் அரண் மனை வேலையிலிருந்து நீக்கப்பட்டார்கள்.

இப்படிச் சித்தார்த்தனுடைய வாழ்வின் ஒவ்வொரு நாளும் அவனறியாமலே சுத்தோ னரால் கண்காணிக்கப்பட்டு வந்தது. அவன் வளர்ந்து வந்தான். உரிய காலத்தில் ஆசிரியர் ஒருவரிடம் ஒப்படைக்கப்பட்டான். ஆசிரியர் எவ்வளவு கற்றிருந்தாரோ அவ்வள வும் சித்தார்த்தன் கற்றுக் கொண்டுவிட்டான். ஆசிரியர் எத்தனை கலைகள் கற்றிருந்தாரோ அத்தனை துறைகளும் சித்தார்த்தனுக்குப் பாடமாகிவிட்டன.

“மன்னர் பிரானே, தங்கள் பிள்ளைக்கு எனக்குத் தெரிந்ததெல்லாம் சொல்லிக் கொடுத்துவிட்டேன். இனியும் அவன் படிக்க வேண்டும் என்றால், என்னைக் காட்டிலும்

மேதைகள் யாராவது இருந்தால் அவரிடம் அனுப்ப வேண்டியதுதான்" என்று ஆசிரியர் வந்து கூறியபோது, தன் மகனின் திறமையை அறிந்து சுத்தோதனர் உள்ளத்தில் களிப்பு மிகுந்தது. மிகுந்த உவகையோடு ஆசிரியருக் குரிய சீர் வரிசைகளைச் செய்து அனுப்பி வைத் தார். கணித அறிவும் நூலறிவும் மட்டும் ஓர் அரசிளங் குமரனுக்குப் போதுமா? வீர விளை யாட்டுகள் முற்றிலும் அவன் அறிந்து கொள்ள வேண்டாமா? சுத்தோதனர் தன் நாட்டில் இருந்த மிகப் பெரிய வீரர்களை அழைத்தார். சித்தார்த்தனுக்குப் போர்க்கலை பயிற்றும்படி ஆணையிட்டார்.

பயிற்சி கொடுப்பவர்கள் எல்லாருக்கும் ஒரே மாதிரியான கட்டளைகள் பிறப்பிக்கப் பட்டன. இளவரசன் மனம் நோக யாரும் நடந்து கொள்ளக்கூடாது. பயிற்சியில் இளவர சனுக்கு நாட்டம் இல்லையென்றால், அத்தோடு நிறுத்திவிட்டு அரசருக்குத் தெரிவிக்க வேண்டும்.

சித்தார்த்தன் எந்தக் கலையிலும் சலிப்புக் கொண்டவனாகத் தெரியவில்லை. வாள் வீச்சில்

கைதேர்ந்தவனானன். அதுபோலவே வேல் பாய்ச்சுவதிலும் சிறந்த வீரனாகத் திகழ்ந்தான். யானைகளைப் பழக்கி அடக்கி நடத்தும் கலையையும் கற்றுக் கொண்டான். அவன் மாமன் ஒருவன் அம்பு எய்யும் முறையைப் பயிற்றுவித்தான்.

பயிற்சியாளர் ஒவ்வொருவரும் வந்து சித்தார்த்தன் எதையும் மிக எளிதாகக் கற்றுக் கொள்ளும் பாங்கையும், இலாவகமாக ஆயுதங்களைக் கையாளும் திறமையையும் பற்றிக் கூறும் பொதெல்லாம் சுத்தோதனர் உள்ளம் குளிர்ந்துவிடும். "என் மகன் நாடாளப் பிறந்தவன்தான். இதில் ஐயத்திற்கிடமே இல்லை" என்று தன் மனத்தைச் சமாதானப்படுத்திக் கொள்வார்.

ஒருநாள் ரோகிணி ஆற்றின் கரையிலே இருந்த ஒரு பெரிய மரம் வேரோடு சாய்ந்து விட்டது. அந்த மரம் ஆற்றின் குறுக்கே விழுந்ததால் ஆற்றின் ஓட்டம் தடைப்பட்டது. தடைப்பட்ட தண்ணீர் கரைப் பக்கமாக உடைத்துக் கொண்டு வயற்புறங்களிலே வெள்ளமாகப் பாய்ந்து ஓடியது. இதனல் விளைந்திருந்த வயல்கள் நாசமாயின. ஆற்றின் கீழ்ப் பகுதி

யிலே உள்ள நிலங்களுக்குத் தண்ணீரில்லாமல் போயிற்று

குடிமக்கள் அரண்மனையிலே வந்து முறை யிட்டார்கள். அரசர் கட்டளைப்படி பல ஏவலா ளர்கள் மரத்தை அப்புறப் படுத்துவதற்காகச் சென்றார்கள். ஆனால் எவ்வளவு முயற்சி செய்தும் மரத்தை அப்புறப்படுத்த முடிய வில்லை. இந்தச் செய்தி சித்தார்த்தன் செவியில் விழுந்தது. அரண்மனையிலிருந்து அவன் ஆற்றங்கரைக்கு ஓடோடி வந்தான். துணிச்சல் உள்ள இளைஞர்கள் சூழச் சென்று, அவர்கள் துணையோடு மரத்தைத் திருப்பி எளிதாகக் கரைக்கு இழுத்து வந்துவிட்டான்.

பலர் கூடி முயன்றும் முடியாத அரிய செயலை மிக எளிதாகச் செய்து முடித்த சித்தார்த்தனின் திறமையையும் கூரிய மதி நுட்பத்தையும் கண்டு நாடே அதிசயித்தது. குடிமக்களைக் காப்பாற்றும் ஒரு கோமகனைத் தான் நான் பெற்றிருக்கிறேன் என்று சுத்தோ தனர் உள்ளம் தனக்குள்ளே பேசிக் கொண் டது.

இன்னுமொரு நிகழ்ச்சி சுத்தோதன ருடைய மனத்திரையிலே படம் விரித்தது.

அரண்மனையிலிருந்து சிறுவர் கூட்டம் ஒன்று ரோகிணியாற்றை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. அரண்மனைப் பூங்காவை யொட்டியிருந்த ஆற்றங் கரையில் ஒன்று கூடி விளையாடுவதற்காகத்தான் அச்சிறுவர்கள் சென்று கொண்டிருந்தார்கள். பூங்காவின் வழியாக நடந்து போய்க் கொண்டிருந்தபோது தலைக்கு மேலே ஒரு தாராக் கூட்டம் பறந்து சென்றது. சித்தார்த்தனும் மற்ற சிறுவர்களும் படபடக்கும் பறவைகளின் இறக்கை ஒலி கேட்டு மேல் நிமிர்ந்து பார்த்தார்கள். அப்போது சற்று தூரத்தில் நின்று கொண்டிருந்த தேவதத்தன் எனும் சிறுவன், தன் வில்லை வளைத்து தாராக் கூட்டத்தை நோக்கி ஓர் அம்பை எய்தான்.

பாவம்! ஒரு தாராப் பறவை அம்பு பட்டுச் சாய்ந்து கீழே விழுந்தது. அது நடந்து சென்று கொண்டிருந்த சித்தார்த்தனின் எதிரில் அவன் காலடியில் வந்து வீழ்ந்தது.

சித்தார்த்தன் குனிந்து அந்தப் பறவையை எடுத்தான். குருதி வழியும் அதன் உடலைக் கண்டு உருகி மனங் கசிந்தான். எவ்வளவு மெதுவாக எடுத்தால் பறவைக்கு வேதனை குறைவாக இருக்குமோ, அவ்வளவு மெது

வாக அதன் உடலில் பாய்ந்திருந்த அம்பை உருவி வெளியே எடுத்தான். புண்ணைக் கழுவித் துடைத்து, குருதி மேலும் வெளிப் படாதபடி புண் வாயை அடைத்துத் துணி வைத்துக் கட்டினன்.

தாரா இனிப் பிழைத்துவிடும் என்ற நம்பிக்கை ஏற்பட்ட பிறகு தான் அவனுடைய பணிகள் நின்றன.

"சித்தார்த்தா, இந்தத் தாராவுக்கும் உனக்கும் முன்னமேயே உறவிருக்கிறதோ? நேராக உன் காலடியில் வந்து தஞ்சமடைந்து விட்டதே. நீயும், அதைக் காப்பாற்றி விட்டாயே!" என்று கேட்டான் கூட இருந்த ஒரு சிறுவன். "ஆம்' இதுவரை எனக்கும் இதற்கும் உறவு இருந்ததோ இல்லையோ, இனிமேல் நிச்சயமாக உண்டு. நான் இந்தப் பறவையை வளர்க்கப் போகிறேன்" என்று கூறிச் சோர்ந்து கிடந்த பறவையைத் தன் மார்போடு அணைத்துக் கொண்டான் சித்தார்த்தன்.

அப்போது சிறிது தூரத்திலிருந்து ஒரு பையன் ஓடிவந்தான்.

"சித்தார்த்தா, இந்தத் தாராவை தேவ தத்தன் வாங்கிக் கொண்டுவரச் சொன்னான்" என்றான் அந்தச் சிறுவன்.

"தேவதத்தனா? அவன் எதற்கு வாங்கி வரச் சொன்னான்?" என்று கேட்டான் சித்தார்த் தன்.

"தேவதத்தன் தான் அம்பெய்து இந்தப் பறவையை வீழ்த்தினான். அது அவனைச் சேர வேண்டியதுதானே!" என்று நியாயம் பேசினான் அந்தச் சிறுவன்.

"தேவதத்தன் அம்பு எய்து இதைக் கொல்லப் பார்த்தான். நான் காயத்துக்குக் கட்டுப்போட்டு இதைக் காப்பாற்றிவிட்டேன். நெஞ்சில் கைவைத்துச் சொல். இது யாருக்குச் சொந்தம்? கொல்ல முயன்றவனுக்கா? காப் பாற்றியவனுக்கா?" என்று சித்தார்த்தன் கேட்டான்.

"காப்பாற்றியவனுக்குத்தான் சொந்தம்!" என்று கூட இருந்த சிறுவர்கள் சித்தார்த் தனோடு சேர்ந்துகொண்டு பேசினார்கள்.

தாராவை வாங்கிச் செல்ல வந்த பையன் ஏமாற்றத்தோடு திரும்பினன். தேவதத்தனிடம் போய் நடந்த நிகழ்ச்சிகளைக் கூறினன்.

சித்தார்த்தன் தாராவைக் கொடுக்க முடியா தென்று சொன்னது கேட்டு தேவ தத்தன் சீறினன்; ஆத்திரப்பட்டான். அவனும் அரச குலத்தைச் சேர்ந்தவன் தான். சித்தார்த்த னுக்கு உறவினன்தான். ஆனல், இளவரசனை அதுவும் சுத்தோதனருடைய செல்லக் குழந் தையை எதிர்த்து அவன் என்ன செய்துவிட முடியும்.

சித்தார்த்தன் அந்தத் தாரா குணமடை யும்வரை வைத்திருந்து பிறகு அதைச் சுதந்திர மாகப் பறந்து செல்லும்படி விட்டு விட்டான்

இந்த நிகழ்ச்சியைச் சிறுவர்கள் சொல்லக் கேட்டதுமுதல் சுத்தோதனருக்கு இருப்புக் கொள்ளவில்லை. இவ்வளவு கருணை ஓர் இளவர சனுக்கு இருக்குமா? இருக்க முடியுமா? இருக்கலாமா? ஒரு பண்பட்ட ஞானிக்குத்தான் இந்தக் குணம் ஏற்றது. அப்படியானல் சித் தார்த்தன் ஞானியாகத்தான் திகழ்வான? அரண்மனை வாழ்வைத் துறந்துவிடுவான?

என்று நினைத்தபோது சுத்தோதன மாமன்ன ருக்கு சிந்தை குழம்பியது. இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும் அவர் மனத்தைக் கலக்கியது. அவர் ஆராய்ச்சியில் ஈடுபட்டார். கானகம் செல்லாமல் சித்தார்த்தனைத் தடுத்து நிறுத்துவதற்கு மேற்கொண்டு என்ன செய்யலா மென்று சிந்தித்துத் திட்டங்கள் வகுத்தார்.

கவலையே தெரியாமல் வளர்த்தால் இளவரசனுக்குக் கானக நாட்டம் எழாது என்று முடிவு கட்டினர். உலகில் உள்ள கவலைகள் ஒன்றுகூட அவனுக்கு ஏற்படக்கூடாது. மனிதர்களாலும் விலங்குகளாலும் ஏற்படுகின்ற துன்பம் மட்டுமல்லாமல் காலத்தால் ஏற்படு கின்ற கவலைகளும்கூட சித்தார்த்தனை அணுகக் கூடாது என்று அவர் முடிவு செய்தார்.

வெயிலின் கடுமையோ பனியின் கொடு மையோ மழையின் குளுமையோ சித்தார்த்தன் உடலைத் தீண்டித் தொல்லை கொடுக்கக் கூடாது என்று அவர் முடிவு செய்தார்.

உடனே அவர் தம் அரண்மனையை அடுத் தாற்போல் மூன்று மாளிகைகள் கட்ட ஏற்பாடு செய்தார்.

ஒரு மாளிகை கார் காலத்தில் வசிப்பதற்கு ஏற்றதாயிருந்தது. மழைக் காற்றின் ஊதலோசையும், இடியின் உறுமலோசையும், மின்னல் வீச்சின் ஒளியும் உள் நுழையாதபடியான அமைப்புடன் கைதேர்ந்த கட்டிடக் கலைஞர்களைக்கொண்டு அந்த மாளிகையைக் கட்டி முடித்தார் சுத்தோதனர்.

இரண்டாவது மாளிகை கோடை காலத்தில் இருப்பதற்குப் பொருத்தமாயிருந்தது. வெப்பம் உள் நுழையாதவாறு மாளிகையைச் சுற்றிலும் அசோக மரங்கள் வளர்க்கப் பெற்றிருந்தன. இடைவிடாது பீச்சிப் பாய்ந்து கொண்டிருக்கும் நீரூற்றுக்கள் மாளிகையின் உள்ளும் புறமும் ஆங்காங்கே அமைக்கப்பட்டிருந்தன. நல்ல காற்றோட்டமுள்ளதாகவும் கோடையின் வெப்பம் சிறிதும் தாக்காதவாறும் அமைக்கப் பெற்றிருந்தது அம்மாளிகை.

மூன்றுவது மாளிகை பனிக் காலத்தில் வாசம் செய்வதற்குத் தக்கதாயிருந்தது. வாட்டும் குளிர்காற்று உள் நுழையாதபடி செய்யப் பெற்றிருந்ததுடன், ஆங்காங்கே கணப்புக்களும் அமைக்கப் பெற்று வாடைக்

காற்றின் கொடுமையை அகற்றிக் கொண்டிருந்தன.

ஆண்டின் மூன்று பருவங்களிலும் சித்தார்த்தன் இந்த மாளிகைகளில் மாறிமாறி இருந்துவந்தான். மூன்று மாளிகைகளும் எடுப்பான பார்வையும், சுற்றிச் சூழ்ந்த அழகான பூங்காக்களும் அமைந்து இன்ப உலகங்களாகக் காட்சியளித்தன.

உரிய பருவத்தில் சித்தார்த்தனுக்குத் திருமணம் செய்து வைத்து விட்டார் சுத்தோதனர். சித்தார்த்தனுக்குத் தகுந்த பெண்ணைத் தேடி அவர் அலைந்துகொண்டிருக்க நேரவில்லை. அவனுக்குப் பொருத்தமான பெண் அருகிலேயே இருந்தாள். முறைப் பெண்ணாக இருந்த இளவரசி யசோதரை அழகியாக இருந்ததுடன் அரசர் நினைத்தபடி சித்தார்த்தனை வைத்துக் கொள்ளக்கூடிய நற்குணவதியாகவுமிருந்தாள். மென்மையான அவளுடைய நல்லியல்புகளும், அமைதியாகவும் பொறுமையாகவும், அடக்கமாகவும் இருக்கும் குணச் சிறப்பும் பொருந்தியவளாக இருந்த அவளைச் சித்தார்த்தனுக்கு மணமுடித்து வைத்தார் மன்னர்.

ஏராளமான பொருட் செலவில் திருமணம் சீரும் சிறப்புமாக நடந்தது. சித்தார்த்தனும் அழகி யசோதரையுடன் இன்பமாக இல்லறம் நடத்தினன். சித்தார்த்தனும் யசோதரையும் அன்புடன் இன்பமாக வாழ்வதைக் கண்ட பிறகுதான், சுத்தோதனர் மனக்கவலையில் பெரும்பகுதி தீர்ந்தது. இனிமேல் தன் மகன் துறவியாக மாட்டான் என்ற ஓர் உறுதி அவர் உள்ளத்திலே வளரத் தலைப்பட்டது. இருந் தாலும் அவர் தம் மகன் உலக நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ளாதபடியே பார்த்துக்கொண்டு வந்தார். ஏனெனில், திடீரென்று அவன் மனம் மாறிவிட்டால் என்ன செய்வதென்ற ஓர் அச்சம் சிறிதளவு அவர் மனத்தில் இருக்கத்தான் செய்தது.

இப்படி சுத்தோதனர் ஓரளவு கவலை நீங்கி இருந்தபோதுதான் அவருடன் பிறந்த தம்பி, அந்தப்புரமே கதியென்று சித்தார்த்தன் கிடப் பது அரசகுலத்து மாவீரர்களுக்கு ஏற்றதல்ல என்ற உண்மையை நினைவு படுத்தினன்.

யார் என்ன சொன்ன போதிலும் சித்தார்த் தன் அசாதாரண ஆற்றல் படைத்த மாவீரன் என்பதிலே சுத்தோதனருக்குச் சிறிதுகூட

ஐயம் இல்லை. தன்னுடைய ஏற்பாட்டின்பேரில் தான் அவன் அந்தப்புரமே கதியென்று கிடக்கிருன் என்ற உண்மையையும் அவர் மறந்து விடவில்லை.

ஆகவே, அவர் தன் தம்பியையும், கூடியிருந்த உறவினர்களையும் நோக்கி, “சித்தார்த்தன் நீங்கள் நினைப்பதுபோல் கோழையல்ல; திறமையற்றவனுமல்ல. காலம் வரும்போது அவனுடைய ஆற்றலைக் காண்பீர்கள்” என்று உறுதி மிகுந்த குரலில் கூறினர்.

அவர் எவ்வளவு உறுதியான முறையில் கூறிய போதிலும் கூடியிருந்த உறவினர்களுக்கு மனநிறைவு ஏற்படவில்லை.

இந்தப் பேச்சு, இளவரசன் வீரமற்றவனுக விளங்கினன் என்ற பேச்சு அந்த விருந்து நிகழ்ச்சிக்குப் பிறகு எங்கும் பரவியது. நகரின் முக்கிய மன்றங்களிலும், அரண்மனை அலுவலகங்களிலும், அந்தப்புர வேலைக்காரர்கள் கூடும்போதும், பொழுது போக்குத்துணையாக இந்தப் பேச்சுப் பயன்பட்டது.

“இளவரசன் இப்படி யிருந்தால் நம் நாடு

என்ன ஆகும்? பெரிய அரசருக்குப் பிறகு இந்தப் பேரரசு எப்படி நடைபெறும்? எதிரிகள் சுற்றி வளைத்துக் கொள்வார்களே!'' என்றெல்லாம் மக்களும் அரசியல் அலுவலாளர்களும் ஆங்காங்கே பேசிக்கொள்ளத் தொடங்கினர்.

சுத்தோதனரின் கட்டுத்திட்டங்களையெல்லாம் மீறி இந்தப் பேச்சு சித்தார்த்தனின் செவிகளிலும் விழுந்தது.

"அப்படியா பேசிக் கொள்கிறார்கள்? நான் என் திறமையைக் காட்டுகிறேன் பார்!'' என்று சித்தார்த்தன் தன் உயிர் நண்பன் ஒருவனிடம் கூறினான்.

சித்தார்த்தன் போட்டியில் ஈடுபட விரும்புகிறான் என்ற செய்தி கேட்டவுடன் சுத்தோதனர் பெருமகிழ்ச்சி யடைந்தார். உடனே போட்டிவிழா நடப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்.

குறிப்பிட்ட நாளொன்றில் போட்டிவிழா நடைபெற்றது. நகரெங்கும் முரசறைபவர்கள் போட்டியாளர்களைக் கூவி அழைத்தார்கள். இளவரசனைப் போட்டியிலே எதிர்த்து நின்று

வெல்லுபவர்களுக்குப் பரிசுகள் கிடைக்கும் என அறிவித்தார்கள். வீரர்கள் போட்டியில் கலந்து கொள்ளவும், போட்டியைக் காணவும் களத்தில் வந்து கூடினார்கள். வேடிக்கை பார்க்கப் பொதுமக்கள் திரண்டு வந்தார்கள். அரசகுலத்தைச் சேர்ந்தவர்களும், பெருநிலக் கிழார்களும், வீரர்களும் சூரர்களும் போட்டி யிலே கலந்து கொண்டார்கள்.

வில்லெய்வதிலே இளவரசனை வென்று வாகை சூட வந்த வீரர்கள் பலர். சிலம்ப வித்தையிலே சித்தார்த்தனைத் தோற்கடிக்க எண்ணிவந்த தீரர்கள் பலர். வாள் வீச்சிலே தோள்வலியைக் காட்டிப் பரிசுப் பொருளைத் தூக்கிக் கொண்டுபோக ஊக்கமுடன் வந்த வர்கள் பலர். மற் போரிலே மலர் வாகை சூட வந்த மல்லர் பலர். இப்படி வந்தவர்களை யெல் லாம் அவரவர்களுக் குரிய துறையிலே மண்ணைக் கவ்வச் செய்து விண்ணை எட்டும் புகழ் பெற்றான் சித்தார்த்தன்.

அம்பெய்யும் கலையிலே அவனுக்கு நிகரில்லை என்று அந்நாளில் புகழ்பெற்றிருந்த தேவதத்தன் சித்தார்த்தன் திறமைக்கு முன் னாலே வெட்கித் தலைகுனிய நேர்ந்தது. அது

போலவே, சிறந்த வாள் வீரன் என்று பல நாட்களாகப் புகழுடன் விளங்கிய நந்தன் சித்தார்த்தனின் சுழலும் வாளின் வேகங் கண்டு ஆற்ருமல் தோற்றுப் பின்வாங்கிவிட்டான்.

போட்டி விழாவிலே நடைபெற்ற அத்தனை போர்க்கலைகளிலும் வென்று புகழ்வாகை சூடி நின்ற சித்தார்த்தனை அந்த அளவிலே ஒரு மாவீரனுக ஏற்றுக்கொள்ள அங்கு கூடியிருந்த சாக்கிய வீரர்கள் மனம் துணியவில்லை.

கபிலவாஸ்து நகரிலே இருந்த திருக் கோயில் ஒன்றிலே ஒரு பெரிய வில் இருந்தது. அந்தப் பெரிய வில் சித்தார்த்தனின் பாட்டனுர் சின்னகானு என்பவருடையது. சின்னகானு பெரிய போர்வீரர். மலையென உயர்ந்த தோளும், அகன்ற மார்பும் பொருந்திய வலியவர். அவருக்குப் பிறகு அந்தப் பெருவில்லை வளைக்கும் திறனுடையார் யாரும் பிறந்ததில்லை என்று மக்கள் பேசிக் கொண்டார்கள். அந்த வில்லை வளைத்து நாணேற்றுபவனே மாவீரன் என்று சாக்கிய வீரர்கள் தீர்மானித்தார்கள். எனவே, போட்டிக்கு வந்த வீர இளைஞர்கள் சின்னகானுவின் பெரிய வில் இருக்கும் திருக் கோயிலுக்கு அழைத்துச் செல்லப்பட்டனர்.

இளமையும் துடிப்பும் கொண்ட அந்த வீர இளைஞர்கள் யாராலும் பருமையும் திண்மையும் கொண்ட அந்த வில்லை வளைக்க முடியவில்லை.

கடைசியாகச் சித்தார்த்தன் எழுந்தான். அந்த வில்லை நோக்கி நடந்தான். பருத்த அந்த வில்லை நிமிர்த்தினான். தரையில் ஒரு புறத்தை அழுத்தி மிக எளிதாக வளைத்துக் கண்மூடிக் கண்திறப்பதற்குள் நாண்பூட்டி விட்டான். நாண்பூட்டிய உடனே அதைத் தோளுக்கு நேரே தூக்கிப் பிடித்து அம்பொன்று பொருத்தி விண் என்ற ஒலியுடன் விடுத்தான். சித்தார்த்தன் விடுத்த அந்த அம்பு விண்வீதி வழியாக விரைந்துசென்று நகரின் எல்லை கடந்து காட்டுக்குள்ளே வெகு தொலைவிலே போய் விழுந்தது.

கூடியிருந்தவர்கள் பிரமித்து நின்றார்கள் இளவரசனைப் பற்றித் தாங்கள் எண்ணிக் கொண்டிருந்த தெல்லாம் எவ்வளவு தவறு என்று உணர்ந்தார்கள். பலபல பாராட்டுரைகள் கூறி மகிழ்ந்தார்கள்.

சாக்கிய குலம் விளங்கவந்த தனி வீரன் என்று மாவீரர்கள் கூடிச் சித்தார்த்தனைப் பாராட்டினார்கள்.

"எல்லா வகையாலும் நாடாளத் தகுதி பெற்ற ஓர் ஒப்பற்ற வீரனை மகனாகப் பெற்றேன்" என்று எண்ணி எண்ணி மகிழ்ந்தார் மாமன்னர் சுத்தோதனர்.

விருந்து மண்டபத்திலே அவரைக் கேள்வி கேட்ட தம்பி, "அண்ணா, சித்தார்த்தன் நம் குலத்தின் திருவிளக்காக விளங்குவான்!" என்று பொங்கும் இன்பத்துடன் கூறிய சொற்கள் சுத்தோதனரின் செவிகளிலே தேன் பாய்ச்சின.



## 2. உண்மை தேடிப் புறப்பட்ட ஒளிமாணிக்கம்

அப்பொழுது கோடைகாலம். தனக்காகக் கட்டப்பட்ட மூன்று அரண்மனைகளில் ஒன்றான வசந்த மாளிகையில் சித்தார்த்தன் இருந்தான். மூன்று மாளிகைகளிலும் மிக அழகானது வசந்த மாளிகைதான். வசந்த மாளிகையின் ஒரு மண்டபத்திலே சித்தார்த்தன் தனியாக உட்கார்ந்து கொண்டிருந்தான். யசோதரை பின் கட்டு ஒன்றிலே தன் தோழிமார்களோடு பேசிக் கொண்டிருந்தாள். ஆகையால் சித்தார்த்தன் தன்னந்தனியே பித்துப் பிடித்தவன் போல் இருக்கவேண்டி நேர்ந்தது.

அப்போது சித்தார்த்தனின் நண்பன் நந்தன் அங்கே வந்து சேர்ந்தான்.

"நந்தா, வா வா. நல்ல வேளையாக நீ வந்து சேர்ந்தாய்!" என்று கூறி அவனை வரவேற்றான் சித்தார்த்தன்.

“சித்தார்த்தா, ஏன் என்னை நீ எதிர்பார்த்துக் கொண்டிருந்தாய்?” என்று ஆவலோடு கேட்டான் நந்தன்.

“இல்லை. எனக்குப் பொழுது போகவில்லை. என்ன செய்வதென்று தெரியாமல் இருந்தேன். இந்தச் சமயம் நீ வந்துவிட்டாய்!” என்றான் சித்தார்த்தன்.

“நல்லது, இப்போது என்ன செய்யவேண்டும்?”

“பொழுது போவதற்கு ஏதாவது ஒரு வழி சொல்.”

“பூஞ்சோலைக்குப் போவோமா?” என்று கேட்டான் நண்பன் நந்தன்.

“போய்ப்போய் அலுத்துவிட்டது. வேறு ஏதாவது சொல்”

நந்தன் சிந்தனை செய்தான்.

திடீரென்று அவன் முகம் பளிச்சிட்டது.

“சித்தார்த்தா, நீ இதுவரை வேட்டைக்குப் போனதே யில்லையே! இன்று வேட்டைக் காட்டுக்குப் போகலாம். பொழுது மிக எளிதாகப் போய்விடும்!” என்றான் நந்தன்.

“உண்மையா? அப்படியானால் புறப்பட ஏற்பாடு செய்!” என்றான் சித்தார்த்தன்.

நந்தன் வேட்டைக்குப் போக வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் செய்து முடித்துவிட்டுத் திரும்பி வந்தான்.

சிறிது நேரத்தில் கபிலவாஸ்து நகரை யடுத்திருந்த காட்டை நோக்கி குதிரை வீரர் கூட்டம் ஒன்று சென்றுகொண்டிருந்தது. சித்தார்த்தனும் நந்தனும் சில வீரர்களும்தாம் அந்தக் கூட்டத்தில் இருந்தனர்.

வேட்டைக் காட்டை அடைந்தவுடன் குதிரைகளை ஓரிடத்தில் கட்டிவிட்டு வீரர்கள் காட்டிற்குள் நுழைந்தனர்.

நெடுநேரம் அவர்கள் காடு முழுவதும் சுற்றியலைந்தும் ஒரு விலங்குகூடக் கண்ணில் படவில்லை. கதிரவன் உச்சியை அடைந்த பொழுது அவர்களுக்கு களைப்பும் பசியும் மேலிட்டது. ஒரு மரத்தடியில் உட்கார்ந்து கட்டுச் சோற்று மூட்டையை அவிழ்த்து உண்டனர். தண்ணீர் அருந்தினர். நிழலில் படுத்து அரைத் தூக்கமாக உறங்கினர்.

வலது புறத்திலே சிறிது தொலேவில் ஒரு புதர்ச் செடிக்குப் பின்னுலே சிறு சலசலப்பு ஏற்பட்டது. நந்தன் எழுந்து நின்று செவிசாய்த்துக் கேட்டான்.

அவன் முகம் மலர்ந்தது.

"சித்தார்த்தா, எழுந்திரு. அதோ அந்தப் புதர்க் கூட்டங்களின் பின்னுலே மான் கூட்டம் இருக்கிறது. நான் போய் அதைக் கலேத்து விடுகிறேன். நீ அந்த மான்களேத் தொடர்ந்து சென்று வேட்டையாடு" என்று கூறிவிட்டு அவன் புதர் நிறைந்த பகுதியை நோக்கி வலப் புறமாக ஓடினுன். சித்தார்த்தன் வில்லும் அம்புமாக வேட்டையாட ஆயத்தமாக நின்ருன்.

நந்தன் கலேத்துவிட்ட மான்களில் ஒன்று சித்தார்த்தன் எதிரில் மிக அருகாகத் துள்ளிப் பாய்ந்து ஓடியது.

அதைக் கண்டவுடன் சித்தார்த்தன் வில்லேத் தோளுக்கு உயர்த்தினுன். குறிபார்த்தான். நாணே இழுத்தான்.

அவ்வளவுதான், குறி தவருது பாயும் அவனுடைய அம்பு ஒரு கணத்தில் அந்த

மானின் குடலைக் கிழித்திருக்கும். ஆனால், இழுத்த நாணை அவன் விடுவிக்காது இழுத்தது இழுத்தபடியே அந்த மானையே பார்த்துக் கொண்டு நின்றான். காட்டுவழியே அது துள்ளித் துள்ளிப் பாய்ந்து ஓடிக் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்துவிட்டது.

பின்னும் பின்னும் பல மான்கள் அவன் எதிரே அருகிலும் தூரத்திலுமாகத் தோன்றித் துள்ளிப் பாய்ந்து ஓடிச்சென்று மறைந்தன. சித்தார்த்தன் வில்லையும் அம்பையும் கீழே போட்டுவிட்டு அவை ஓடி மறைவதைப் பார்த்துக்கொண்டு அசைவற்று நின்றான்.

மான் கூட்டத்தைக் கலைத்து விட்டுத் திரும்பி வந்த நந்தன், சித்தார்த்தன் ஐந்தாறு மான்களையாவது வீழ்த்தியிருப்பான் என்று எதிா பார்த்தான். ஆனால், வீழ்ந்து கிடந்த வில்லையும் அம்பையும் தான் அவன் பார்த்தானே தவிர ஒரு மானைக் கூடக் காணவில்லை.

"சித்தார்த்தா, நீ வேட்டையாடவில்லையா?" என்று கேட்டான் நந்தன்.

"நந்தா, அந்த மான்களைக்கொல்ல எனக்கு மனம் வரவில்லை. அவை நமக்கு என்ன தீங்கு

செய்தன? அவற்றை நாம் ஏன் கொல்ல வேண்டும்? ஆனந்தமாகக் காட்டிலே துள்ளி விளையாட வேண்டிய மான்கள் நம்மைக் கண்டு அஞ்சி அரண்டு ஓடுவதைப் பார்த்தாயா? அவற்றின் அச்சத்தைக் கண்ட பின்னும் அவற்றைக் கொல்ல மனம் வருமா?'' என்றான் சித்தார்த்தன்.

“சித்தார்த்தா, நாம் இங்கே வேட்டையாடத்தானே வந்தோம்?'' என்று கேட்டான் நந்தன்.

“நமக்கு வேட்டை; ஆனால் ஒரு பாவமும் அறியாத அந்தச் சிறு விலங்குகளுக்குச் சாக்காடு! நந்தா, இது நெறியில்லை. வா திரும்பிப் போகலாம்''என்று புறப்பட்டான் சித்தார்த்தன்.

வேட்டைக் காட்டு நிகழ்ச்சியைப் பற்றி சுத்தோதனர் கேள்விப்பட்ட போது, சில நாட்களாக அவர் மறந்திருந்த கவலை மீண்டும் தலையெடுத்தது. சித்தார்த்தனின் அருள் நெஞ்சம் அரசைத் துறந்து ஞானியாகச் செய்து விடுமே என்று அவர் திரும்பவும் கவலைப்பட்டார்.

ஒரு நாள் நாட்டு வளம் காணப் புறப்பட்ட சுத்தோதனர் சித்தார்த்தனையும் தன்

தேரில் அழைத்துக்கொண்டு சென்றார். வழி யெங்கும் அழகிய பூஞ்சோலைகளும் நீர்நிறைந்து ஓடும் ஆறுகளும் காணுதற்கினிய காட்சிகளாக இருந்தன. பொன்னிறமான முதிர்ந்த நெல் வயல்களும் இன்னிசை பாடிப் பறந்து திரியும் சிறு பறவைகளும் கண்டு மகிழ்ச்சியடைந்தான் சித்தார்த்தன். ஓரிடத்திலே தேர் போகும் வழி யிலே, ஓர் உழவன் வற்றி மெலிந்த எருது ஒன் றை ஓட்டிக் கொண்டு சென்றான். தார்க்குச்சி யினால் அடித்தும் கீறியும் அதன் முதுகில் வரி வரியாகப் புண்கள் நிறைந்திருந்தன. அந்தப் புண்ணின் மேலேயே சற்றும் ஈவிரக்கமின்றி அந்த உழவன் மேலும் மேலும் அடித்து அதை ஓட்டிச் செலுத்திக் கொண்டிருந்தான்.

இந்தத் துன்பக் காட்சியைக் கண்ட சித் தார்த்தனின் உள்ளம் உருகியது. இந்தக் காட்சியைக் காணப் பொறுக்காமல் அவன் கண்களை மூடிக் கொண்டான். "அப்பா! அரண்மனைக்குப் போய்விடுவோம்" என்று கூறினான். மகன் விருப்பத்திற்கு மாற்று மொழி கூறியறியாத சுத்தோதனர் தேரைத் திருப்ப ஆணை பிறப்பித்தார். திரும்பிச் சிறிது தூரம் சென்றவுடன், ஒரு பருந்து ஒரு புறாவைக்

கொன்று தின்று கொண்டிருந்த காட்சியையும் மேலும் சிறிது தூரம் சென்ற பின்னர் ஒரு புழு ஈக்களைத் தின்று கொண்டிருந்த காட்சியையும் கண்டு சித்தார்த்தன் துயருற்றான்.

சித்தார்த்தனை ஏன் அழைத்துக் கொண்டு வந்தோம் என்றாகிவிட்டது சுத்தோதனருக்கு. அன்றைய நிகழ்ச்சிகளை சித்தார்த்தன் மறந்து விட அருள் புரிய வேண்டுமென்று அவர் ஆண்டவனை வேண்டிக்கொண்டார்.

சித்தார்த்தன் வெளியே செல்வதற்கென்று நான்கு குதிரை பூட்டிய தேர் ஒன்று இருந்தது. அந்தத் தேரைச் செலுத்தும் பாகன் பெயர் சாணன். தேர்ப்பாகன் சாணன் நல்ல திறமைசாலி மட்டுமல்ல, அனுபவசாலியும்கூட. இளவரசன் கருத்தறிந்து நடக்கக் கூடியவன் என்பதற்காகவே, அவனை சித்தார்த்தனின் தேர்ப்பாகனாக நியமித்திருந்தார் சுத்தோதனர்.

ஒருநாள் சித்தார்த்தன் நான்கு குதிரை பூட்டிய தன் தேரில் ஏறிப் புறப்பட்டான். நகரின் பெரிய வீதிகள் வழியாக அந்தத் தேர் சென்றது. கேளிக்கை மைதானத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்த அந்தத் தேரை சாணன்தான் ஓட்டிக் கொண்டு சென்றான்.

வழிநெடுகிலும், எதிர்பாராது இளவரசனைக் கண்ட மக்கள் கைகுவித்து வணங்கினர்; வாழ்த்து மொழிகள் கூறினர். சிரித்துக் கை தட்டி ஆரவாரம் செய்தனர். ஜெய ஜெய முழக்கம் எழுப்பினர். எல்லாம் இன்பமாகவேயிருந்தது. அன்போடு சிரித்து வரவேற்கும் குடிமக்களைக் கண்டபோது, சித்தார்த்தனுக்கும் மனத்துக்குள் இன்பம் நிறைந்தது.

ஆனால், அந்த இன்பம் நிலைக்கவில்லை. ஐந்தாறு வீதிகளைக் கடந்து மேலும் தேர் ஓடிக் கொண்டிருந்தபோது தள்ளாடித் தள்ளாடி நடந்து செல்லும் ஒரு கிழவனைக் கண்டான் சித்தார்த்தன்.

வாடி மெலிந்த உடலும், வதங்கிச் சுருங்கிய வயிறும், கூனல் விழுந்த முதுகும், குச்சி போன்ற கைகால்களும், குழிவிழுந்தகண்களும், நரைத்துப்போன தலைமயிரும், திரை விழுந்த நெற்றியுமாக அந்தக் கிழவன் ஒரு கம்பைப் பிடித்துக் கொண்டு தள்ளாடித் தள்ளாடி நடந்து சென்று கொண்டிருந்தான். வழியில் போவோர் வருவோரைப் பிச்சைகேட்டு நீட்டிய அவன் கை நடுநடுங்கிக் கொண்டிருந்தது.

பதைபதைக்கச் செய்யும் இது போன்ற காட்சியை சித்தார்த்தன் அதற்கு முன் கண்டதே இல்லை. அந்தக் கிழவனின் நடுக்கமும் துடிப்பும் சித்தார்த்தனின் நெஞ்சை உலுக்கி விட்டன. இந்த மனிதன் ஏன் இப்படித் துன்புற்றுத் துடிக்கிறான் என்ற கேள்வி அவன் மனத்தில் எழுந்தது.

“சானா, ஏன் இந்த மனிதன் இப்படியிருக்கிறான்?” என்று தேர்ப்பாகனை நோக்கிக் கேட்டான்.

“இளவரசே, இதுதான் முதுமை. இந்தக் கிழவன் உலகில் பல ஆண்டுகள் வாழ்ந்து இப்போது மூப்படைந்துவிட்டான். மூப்பினால் அவன் தளர்ந்து மெலிந்துபோய்விட்டான். மனிதர்கள் எல்லோருமே ஒரு காலத்தில் இப்படிப்பட்ட நிலைக்கு ஆளாகித்தான் தீர வேண்டும்” என்று உலக உண்மையை எடுத்துக் கூறினான் அனுபவசாலியான தேர்ப்பாகன்.

இந்தப் பதிலைக் கேட்டு சித்தார்த்தன் கதி கலங்கிப் போனான். மனிதகுலம் இந்த முதுமைப் பிணிக்கு ஆளாகித்தான் தீரவேண்டுமா என்ற

கேள்வி அவன் மனத்தில் எழுந்தது. அந்தக் கிழவனின் தோற்றம் அவன் மனக் கண்ணை விட்டு நெடு நேரம் வரை அகலவேயில்லை. கேளிக்கை மைதானம் சென்ற பிறகும் அவன் இந்தச் சிந்தனை வயப்பட்டவனாகவே யிருந்தான். அரண்மனைக்குத் திரும்பிய பிறகும் சித்தார்த்தனின் முகம் வாட்டத்துடனேயே இருந்தது. அந்தக் கிழவனின் முதுமைத் துன்பம் அவன் மனக் கண்ணை விட்டு அகலாத காட்சியாகவே இருந்தது.

சித்தார்த்தன் இத்துன்ப சிந்தனையில் ஈடுபட்டிருந்த போதே எதிர்பாராத விதமாக சுத்தோதனர் அவனைக் காண நேரிட்டது. மகன் துக்கத்தோடிருப்பதன் காரணத்தை தேர்ப்பாகன் மூலமாக அறிந்தபோது அவர் மனம் கலங்கி விட்டார். இப்படிப்பட்ட துயரக் காட்சிகளைக் காணக் காண மகன் அருளுள்ளம் இளகி அவன் துறவியாகி விட்டால் என்ன செய்வது என்ற அச்சம் அவரைப் பிடித்துக் கொண்டு விட்டது.

அன்றே அவர் கோட்டை வாயில்களில் புதிய காவலர்களை நிறுத்தினர். இளவரசன் கோட்டையை விட்டு வெளிச் செல்லாதபடி

நயமாகப்பேசித்தடுக்க வேண்டியதே இவர்கள் வேலையாக இருந்தது.

நெடுநாட்கள் வரை சித்தார்த்தன் வெளிக் கிளம்பவேயில்லை. பின்னர் ஒரு முறை தேரில் ஏறிக் கேளிக்கை மைதானம் நோக்கிப் புறப்பட் டான். புறப்பட்ட சிறிது நேரத்திலேயே வீதி யின் ஓரத்தில் ஒரு கிழவன் படுத்திருப்பதைக் கண்டான். அந்தக் கிழவனின் உடல் உப்பிப் போயிருந்தது. வலி தாங்காமல் அவன் முக்கி முனகிக் கொண்டிருந்தான். அவன் படும் வாதனையைக் கண்டு மனம் பொறுக்க முடி யாமல் சித்தார்த்தன் தேரிலிருந்து கீழே குதித் தோடினான். அவனுக்கு ஏதாவது உதவி செய்து எப்படியாவது அவனுடைய துன்பத்தைத் தணிக்கவேண்டும் என்பதுதான் அவன் எண்ணமாக இருந்தது. ஆனால் அந்த எண்ணம் நிறைவேறவில்லை. ஒருவர் உடற் பிணியினால் வருந்தும்போது, இன்னொருவர் அவருக்கு எப்படி உதவி செய்யமுடியும்? சித்தார்த்தன் தன் தேர்ப்பாகனை நோக்கி, "சானா, இந்த மனிதன் ஏன் இப்படி வீதியோரத்தில் படுத்துத் துடித்துக் கொண்டிருக்கிறான்?" என்று கேட் டான்.

"இளவரசே, இதுதான் நோய். நோயினுல் பீடிக்கப்பட்ட எவரும் இதுபோலத்தான் வேதனைப்பட நேரிடும். இதிலிருந்து யாரும் தப்ப முடியாது." என்ருன் தேர்ப்பாகன்.

இந்தப் பதிலைக் கேட்ட சித்தார்த்தன் அங்கிருந்து புறப்பட்டுவிட்டான். தன்னுல் அந்த நோயுற்ற கிழவனுக்கு எதுவும் உதவ முடியாது என்ற எண்ணம் ஏற்பட்ட பிறகு, அங்கு நின்று அந்த வேதனைக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்க முடியாதென்று புறப் பட்டுவிட்டான். யாரும் பிணியிலிருந்து தப்ப முடியாதபோது, அரசர்கள் போரிட்டு நாடு சேர்ப்பதும், மக்கள் பாடுபட்டு உழைத்துப் பணம் சேர்ப்பதும் எதற்காக? இவற்ருல் என்ன பயன் வந்துவிடப் போகிறது? என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டான் சித்தார்த்தன்.

சித்தார்த்தன் மூன்ருவது முறையாகத் தன் தேரின்மீது சென்றபோது, ஒரு வீதியிலே கண்ட காட்சி அவன் சிந்தையைக் கிளறியது. நான்குபேர் சேர்ந்து ஒரு பிணத்தைத் தூக்கிக் கொண்டு போனுர்கள். பின்னுல் கோவென்று அழுதுகொண்டும் புலம்பிக் கொண்டும் கண்ணீர் விட்டுக் கொண்டும் சிலர் சென்

ளுர்கள். பாடையில் சென்ற பிணம் அசையாமல் கல்போல் கிடந்தது. அதைச் சூழ்ந்து சென்ற ஆண்களும் பெண்களும் அலறி ஒப்பாரி வைத்துக்கொண்டும் மார்பில் அடித்துக் கொண்டும் சென்ருர்கள். சித்தார்த்தன் அதற்குமுன் இதுபோன்ற காட்சியைக் கண்டதேயில்லை. அரசர்கள் உலாவருவதையும், தெய்வங்கள் ஊர்வலம் செல்வதையும் தான் பார்த்திருந்தான்.

“சாரு, இது என்ன ஊர்வலம்? அவர்கள் எதைத் தூக்கிக்கொண்டு போகிருர்கள்?” என்று தன் தேர்ப்பாகனைக் கேட்டான் சித்தார்த்தன்.

“இளவரசே, அது பிணம். பிணத்தைத் தான் பாடைகட்டித் தூக்கிக்கொண்டு போகிருர்கள். மனிதராகப் பிறந்தவர்கள் எல்லோருமே ஒருநாள் இறக்க வேண்டியதுதான். இறந்து பிணமானவனை எரிப்பதற்காகத்தான் இப்போது கொண்டு செல்கிருர்கள். எவ்வளவு ஆற்றல் வாய்ந்தவர்களாளுலும், எத்தனை பெரிய மாவீரர்களாளுலும் கடைசியில் ஒருநாள் சாக வேண்டியதுதான். சாவிலிருந்து யாரும் தப்பமுடியாது. மனிதர்கள் ஒவ்வொரு

வரும் என்றே ஒரு நாள் இப்படி இறந்து பிணமாகி மண்ணுலகைவிட்டுப் போக வேண்டியது தான்!” என்று விரிவாகவும் விளக்கமாகவும் சாக்காட்டைப் பற்றிக் கூறினான் தேர்ப்பாகன்.

சிந்தனைவயப்பட்டவனாகச் சித்தார்த்தன் தன் மாளிகைக்குத் திரும்பினான். முதுமை, பிணி, சாக்காடு ஆகிய மூன்றையும் விளக்கும் மூன்று காட்சிகளும் சேர்ந்து அவன் மனத்தில் ஒரு பெருஞ் சிந்தனையைக் கிளப்பிவிட்டன.

சித்தார்த்தனின் மனத்திற்குள்ளே ஒரு பெரும் புயல் உருவாகியது. மனிதராகப் பிறந்தவர்கள் இந்தத் துன்பங்களிலிருந்து தப்ப முடியாதா என்ற எண்ணம்தான் ஒவ்வொரு நாளும் அவன் மனத்தைக் குடைந்து கொண்டிருந்தது. அதுவரை தானடைந்த இன்பங்களும் பெருமைகளும் சிறிதுநேரக் கனவுகள்போல மறைந்துபோய்விட்டதை அவன் உணர்ந்தான்.

சித்தார்த்தன் இந்த வேதனைக் காட்சிகளைக் கண்டது பற்றியும், பித்துப்பிடித்தவன் போல் அரண்மனையில் தன்னந்தனியே அன்னந் தண்ணீர் நாட்டமின்றி சிந்தனைவயப்பட்டு

இருந்தது பற்றியும் அறிந்தபோது சுத்தோ தனர் மிகவும் துன்பப்பட்டார். மேலும் ஒரு முறை சித்தார்த்தன் இத்தகைய வேதனைக் காட்சியைக் காணாமல் இருக்க அவர் தீவிர மான ஏற்பாடுகளை மேற் கொண்டார்.

நான்காவதாக ஒரு துன்பக் காட்சியைக் கண்டால், தான் நெடுநாளாக எதிர்பார்த்துப் பயந்து கொண்டிருந்ததுபோல் அவன் துறவி யாகிவிடக்கூடும் என்ற பயம் அவரைப் பிடித் துக் கொண்டது.

கோட்டை வாயில்களிலே அவர் அதிக மான காவல் வீரர்களை நியமித்தார். அத்தோடு மனநிறைவு கொள்ளாமல், தன் தம்பிமார் மூவரையும் மூன்று வாயில்களிலும் நிறுத்தி வைத்துத் தானே நான்காவது வாயிலில் காவல் நின்றார். இரவு நேரத்திலும் வீதிகள்தோறும் காவல் படைகளை உலவிவரச் செய்தார்.

இத்தனை ஏற்பாடுகளையும் கடந்து சித் தார்த்தன் கோட்டையிலிருந்து வெளியேறி விட் டான். சித்தார்த்தனின் தேர்ப்பாகன் சாணன் நல்ல அனுபவமும் திறமையும் உடையவன் என்பதுமட்டு மல்லாமல், சித்தார்த்தனிடம் ஒருவிதமான ஈடுபாடும் கொண்டிருந்தான்.

சித்தார்த்தனின் மனங்கோண அவனால் நடக்க முடியவில்லை. எப்படியோ கோட்டைக்கு வெளியே தேரைச் செலுத்திக் கொண்டு வந்து விட்டான்.

சித்தார்த்தன் நான்காவது முறையாக வழியில் கண்ட காட்சி முந்திய மூன்று முறை களில் கண்டவை போன்றதல்ல; முற்றிலும் மாறுபாடானது.

காவியுடை பூண்ட ஒரு மனிதன், கையில் ஒரு திருவோட்டை ஏந்திக் கொண்டு வீடு வீடாக நுழைந்து பிச்சை வாங்கிக் கொண்டி ருந்தான். அவன் முகத்தில் மற்ற யாரிடமும் காணப்படாத அமைதியும் இன்பமும் நில வுவதை இளவரசன் சித்தார்த்தன் கண்டான். அவனுக்கு அந்த மனிதனின் தோற்றம் மிகவும் பிடித்திருந்தது.

"சானா, இந்த மனிதன் யார்? இவன் இவ்வளவு களிப்போடு இருப்பதற்குக் காரணம் என்ன?" என்று தேர்ப்பாகனைக் கேட்டான்.

"இளவரசே, இவன் ஒரு துறவி. தனக் கென ஒன்றும் வேண்டாமல் எல்லாப் பொருள்

களையும் துறந்துவிட்டவன். இவனுக்கு பந்தம் பாசம் இன்பந் துன்பம் என்று எதுவும் கிடையாது. வயிறு பசிக்கும்போது தெருத் தெருவாகச் சென்று பிச்சை யெடுத்து உண்பான். வேறு எதைப்பற்றியும் யாரைப்பற்றியும் இவன் கவலைப்படுவது கிடையாது. ஆகவேதான் இவன் மகிழ்ச்சியாக இருக்கிறான்" என்று தேர்ப் பாகன் கூறினான்.

தேர்ப்பாகன் கூறிமுடிப்பதற்குள்ளாகச் சித்தார்த்தன் தேர்த்தட்டிலிருந்து கீழே குதித்தான். அந்தக் காவிகட்டிய துறவியின் அருகில் சென்று அவனைச் சில கேள்விகள் கேட்டான்,

துறவியோடு பேசியபின் அவன் தன் ஐயமெல்லாம் தீர்ந்ததுபோல் உணர்வு பெற்றான். தான் எப்படிப்பட்ட வாழ்க்கை நடத்த வேண்டும் என்பது அவனுக்குத் தெளிவாகிவிட்டது. அரசையும், அரண்மனை இன்பங்களையும் துறந்தாலன்றித் தான் மன அமைதி பெற முடியாதென்று அவனுக்குத் தோன்றியது.

அன்று அவன் கேளிக்கை மைதானத்துக்கு சென்றபோது மன அமைதியோடு இருந்தான். மலர்ந்திருந்த பூஞ்செடிகள் ஓர் இன்பத்தை

உண்டாக்கின. வானிலே பாடிப் பறக்கும் சிறுபறவைகளின் குரலொலியும் இறக்கைகள் அடித்துக் கொள்ளும் படபடப்பொலியும் கேட்டு ஆனந்தமுற்றான். என்றும் மலர்ந் திருக்கும் இன்ப வாழ்வை மனித குலம் எய்த வழி கண்டு பிடிப்பதற்குத் தான் ஓர் ஒப்பற்ற வழியைக் கண்டுபிடித்துவிட்டதாக அவன் உள்ளுணர்வு கூறியது.

உடனடியாகத் தான் துறவியாகிவிட வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான்.

அரண்மனைக்குத் திரும்ப வேண்டும் என்ற எண்ணமே சித்தார்த்தனுக்கு அப்போது எழ வில்லை. மாலைப்பொழுது வந்தபோது, பூஞ் சோலையின் நடுவில் இருந்த ஏரியிலே இறங்கிக் குளித்தான். குளித்தபின் ஒரு கல்மேடையின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டான். இளவரசன் இருக்கும் இடத்தை அறிந்து கொண்டு அரண் மனையிலிருந்து வேலையாட்கள் ஆடைகளை எடுத்துவந்தனர். இளவரசன் வழக்கமாக அணிந்து கொள்ளும் ஆடம்பரம் மிகுந்த அந்த ஆடைகளை சித்தார்த்தன் அணிந்து கொண் டான். ‘இதுதான் நான் கடைசி முறையாக இத்தகைய ஆடைகளை அணிந்து கொள்வது’

என்று தன் மனத்திற்குள்ளே எண்ணிக் கொண்டான்.

ஆடையணிந்து முடிந்தபின், தன் தேரிலே ஏறப்போனான். தேர்த்தட்டில் ஒரு காலை எடுத்து வைத்தபோது, அரண்மனையிலிருந்து ஓர் ஆள் ஓலை கொண்டுவந்தான். "இளவரசே ஒரு மகிழ்ச்சியான செய்தி. யசோதரா தேவி யார் ஓர் ஆண் மகனைப் பெற்றெடுத்திருக் கிறார்கள்." என்று அந்த ஆள் பொங்கும் மகிழ்ச்சியோடு ஓலையை நீட்டினான்.

இந்த நற்செய்தி சித்தார்த்தனுக்கு இன்பந் தருவதற்கு மாறாக சிந்தனையைக் கிளறுவ தாகவே இருந்தது. "என்னைப் பிணைக்க மற் றொரு பந்தம் பிறந்ததுபோலும். அன்பு மனைவி யசோதரையையும் அருமைத் தந்தை சுத்தோ தனரையும் துறப்பது போலவே இந்தப் பிள்ளை யையும் துறக்க வேண்டியதுதான்" என்று மனத்திற்குள் முடிவுகட்டினான் இளவரசன்.

இளவரசன் தான் சொல்லிய செய்திக்குக் கையில் கிடைத்த பொருளைப் பரிசாக அளிப் பான் என்று எதிர்பார்த்த வேலையாள் ஏமாந்து போனான். சிந்தனை வயப்பட்ட சித்தார்த்தன்

அவன் கையில் எதுவுமே கொடுக்கவில்லை. தன் நினைவற்று அவன் தேரில் ஏறியவுடன் தேர் புறப்பட்டது. அரண்மனையில் கொண்டுவந்து அவனை இறக்கிவிட்டது.

அரண்மனை முழுவதும் ஒரே கோலாகல மாக இருந்தது. பணியாட்களும் தாதிப் பெண்களும் செவிலிகளும் அங்குமிங்கும் அவசரமாகவும் ஆனந்தமாகவும் ஓடிக் கொண் டிருந்தனர். வேளைக்கு வேளை விருந்தினர்கள் வந்து கூடிக் கொண்டிருந்தனர். எங்கும் திரு விளக்குகள் ஏற்றப்பட்டன. இன்னிசை முழக் கம் இடைவிடாது ஒலித்துக் கொண்டிருந்தது. ஏரிக்கரையில் உடுத்திய ஆடம்பர உடை யுடன் இளவரசன் சித்தார்த்தன் அரண்மனை யில் நுழைந்தபோது, அவன் தன் மகிழ்ச்சிக் குரிய ஆடையணிந்திருக்கிறான் என்றே பார்த் தவர்கள் நினைத்துக் கொண்டனர். ஆனால், இந்தக் கோலாகலமெல்லாம் அவன் உள்ளத் தில் குதூகலத்தை எழுப்பவில்லை.

தன் தனி அறைக்குச் சென்று கட்டிலில் சாய்ந்து படுத்தவன் அப்படியே உறங்கி விட்டான்.

சித்தார்த்தன் கண் விழித்தபோது நள்ளிரவு. அரண்மனை ஆரவாரங்களெல்லாம் அடங்கி அமைதியாகக் காட்சி யளித்தது. எழுந்து மெல்லமெல்ல நடந்து தேர்ப்பாகன் படுத்திருக்கும் இடத்திற்குச் சென்றான்.

"சாணு" சாணு" என்று அவன் அழைத்த குரல் கேட்டு நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்த தேர்ப்பாகன் சட்டென்று விழித் தெழுந்தான்.

"சாணு, வெளியே போகவேண்டும். என்னுடைய குதிரையை ஆயத்தப்படுத்து" என்றான் சித்தார்த்தன். அந்த நள்ளிரவு நேரத்தில் அரண்மனையை விட்டு எதற்காகப் போக வேண்டும் என்று சற்றுத் தயங்கினான் தேர்ப்பாகன். சுத்தோதனரின் கட்டளைகள் அவனுக்கு நினைவு வந்தன.

"சாணு, நான் அரண்மனை வாழ்வையே துறக்கப் போகிறேன். இப்பொழுதே புறப்பட வேண்டும். எழுந்திரு. விரைவில் குதிரையை ஆயத்தப்படுத்து" என்று மீண்டும் சித்தார்த்தன் கூறியபோது தேர்ப்பாகன் அதிர்ச்சி யடைந்து போனான் என்றே சொல்லவேண்டும்.

அவனுக்குத் துன்பமாக இருந்தது. ஆனால், என்றுமே சித்தார்த்தனின் கட்டளையை மறுத்துப் பழக்கமில்லாத அந்தத் தேர்ப்பாகன், அன்றும் மறுக்க முடியவில்லை. ஆணையை ஏற்றுக் குதிரைகளை ஆயத்தப்படுத்த குதிரைக் கொட்டிலுக்குச் சென்றான்.

இதற்கிடையில் தான் எப்படி வெளியேறுவது என்ற சிந்தனையில் சித்தார்த்தன் மூழ்கினான். தன் தந்தையிடம் போய்த் தன் மனக் கருத்தைக் கூறி விடைபெற்றுக் கொள்வோமா என்று முதலில் அவன் நினைத்தான். ஆனால் அது எளிதான செயலல்ல என்று தோன்றியது. தனக்காக அவர் தனக்குத் தெரியாமல் ஏற்பாடு செய்திருந்த கட்டுக் காவல்களைப் பற்றி நினைத்தபோது, அவர் தன்னைப் போகவிடமாட்டார் என்பது உறுதியாகத் தோன்றியது. எனவே அவரிடம் சொல்லிக் கொள்ளாமலே புறப்படுவது என்று முடிவு செய்தான்.

யசோதரையைப் பற்றி நினைத்தபோது தான் அவன் மனம் சிறிது சஞ்சலமுற்றது. தன்னிடம் அவள் எவ்வளவு அன்பாக இருந்தாள்? உயிரையே வைத்திருக்கிறாளே! அவளி

டம் சொல்லிக் கொள்ளாமல் போவது எவ்வளவு தவறு! என்று நினைத்தான். ஆனால், சொல்லிக் கொண்டு போவதென்றால் அது நடக்கக் கூடியதா? அவள் தன்னைப் போக விடுவாளா? காலைக் கட்டிப் பிடித்துக்கொண்டு அழுது கதறினால் என்ன செய்வது! அவள் துன்பப் பட்டுத் தான் பார்த்ததே யில்லையே! அப்போது அவள் அடையக் கூடிய துன்பத்தைப் பார்த் துக் கொண்டு தன்னால் கல்போல் இருக்க முடியுமா? முடியவே முடியாது! ஆனால், எப்படி யும் யசோதரையைவிட்டுப் பிரிந்துதான் ஆக வேண்டும். அவள் ஒருத்தி படும் துன்பத்துக் காகத் தயங்கினால், கோடானு கோடியாக உலகில் வாழும் மக்களின் துன்பத்தைப் போக்க வழி காண முடியாமலே போய்விடுமே! கடைசி முறையாக அவளைப் பார்த்து, அவளிடம் தன் கருத்தை எடுத்துக்கூறி, அவள் மலர்க் கன்னத் தில் ஒரு முத்தமிட்டு விடை பெற்றுக்கொண்டு போய்விடலாம் என்று முடிவு செய்து கொண் டான்.

மெல்ல மெல்ல அடியெடுத்து வைத்து அவள் அறைப்பக்கம் போனான். அவள் அன்று தன் அறைக் கதவைத் தாளிடாமலே படுத்

திருந்தாள். ஆகவே, மிக எளிதாக ஓசைப் படாமல் கதவை நகர்த்திக் கொண்டு அவன் உள்ளே நுழைந்தான். அமைதியாக, பின் நிகழ்வைப் பற்றிய எத்தகைய கவலையுமின்றி கண்மலர் மூடித் துயின்று கொண்டிருக்கும் அந்தப் பூங்கொடியைப் பார்த்தவுடனேயே அவன் ஊக்கமெல்லாம் பறந்துவிட்டது. அவளை விட்டுப் பிரிவது என்ற எண்ணமே வேதனை தருவதாக இருந்தது. அவளை எழுப்பி அவளி டம் விடைபெற்றுக் கொள்ளத் தக்க ஊக்கமும் உறுதியும் தனக்குக் கிடையாது என்பதை உணர்ந்த சித்தார்த்தன் அவளை எழுப்பாமலே சென்றுவிட முடிவு செய்தான்.

எழுப்ப வேண்டாம். அவள் கன்னத்தி லாவது ஒரு முத்தம் இட்டுச் செல்லலாம் என்று எண்ணிக் குனிந்தான். ஆனால் முத்தமிடவில்லை. முத்தமிடும்போது அவள் விழித்துக் கொண் டால் என்ன செய்வதென்று நிமிர்ந்துவிட்டான்

அன்று பிறந்த தன் பிள்ளை ராகுலன், சின்னஞ் சிறிய மலர்போல் அழகாக யசோ தரையின் மார்போடு ஒட்டிக் கொண்டு கிடப் பதைக் கண்டான் சித்தார்த்தன். ஒரு முறை தன் மகனைத் தூக்கி மார்பில் அணைத்து முத்த

மிட வேண்டும் என்று ஆசைப்பட்டான். ஆனால், அவன் விழித்துக் கொண்டு அழுதால் யசோதரையும் விழித்துக் கொண்டுவிடக் கூடும் என்ற எண்ணம் ஏற்பட்டது. எனவே அந்தப் பிள்ளையின் கையை மெல்லத் தொட்டுப் பார்த்துவிட்டுத் தன் கையை எடுத்துக் கொண்டான். இனித் தான் அரண்மனையில் நிற்பதற்கு நேரமில்லை என்ற உணர்வு வந்தவுடன் அந்த அறையிலிருந்து அப்போதே வெளியேறினான். மெல்ல மெல்ல நடந்து குதிரைக் கொட்டிலை அடைந்தான்.

தேர்ப்பாகன் சாணன் குதிரைக்குச் சேணம் பூட்டி ஆயத்தமாக வைத்திருந்தான். சித்தார்த்தன் தன் குதிரையின் மீது ஏறிக் கொண்டு புறப்பட்டான். தேர்ப்பாகனும் மற்றொரு குதிரையில் அவனைப் பின் தொடர்ந்தான்.

ராகுலன் பிறந்தநாள் கொண்டாட்டத்திற்காக வீதிகள் முழுவதும் மக்கள் தூவிய மலரிதழ்கள் நிறைந்து கிடந்தன. எனவே விரைந்து சென்ற குதிரைகளின் குளம்புகள் அம்மலர் இதழ்களின்மேல் மிதித்துக் கொண்டு

சென்றதால், அவை ஓடும்போது வழக்கமாக எழக்கூடிய குளம்போசை எழவில்லை.

பகலெல்லாம் கொண்டாட்டத்தில் ஈடுபட்டிருந்ததால், இரவுக் காவலர்கள்கூட அந்த நள்ளிரவில் கண்ணயர்ந்து விட்டனர். எனவே யாரும் கவனியாமலே அவர்கள் கோட்டை வாயிலைத் தாண்டி எளிதாக வெளியேறிச் சென்றனர்.

கோட்டையின் கிழக்குவாயில் வழியாக வெளியேறிய அவர்கள் இரவு முழுவதும் பயணம் செய்து பொழுது விடியும் நேரம் ஓர் ஆற்றங் கரையை அடைந்தனர்.

ஆற்றங்கரையில் சித்தார்த்தன் குதிரையைவிட்டு இறங்கினான்.

"சாணா நீ திரும்பிப் போ" என்றான் சித்தார்த்தன்.

"இளவரசே, தங்களைத் தனியாக விட்டு நான் எப்படிப் போவேன்" என்று கதறினான் தேர்ப்பாகன். எப்போதும் அவன் கூடவேயிருக்கப் போவதாகக் கூறினான்.

"சாணு, நான் எங்கே போனேன்? எதற்காகப் போனேன்? என்றெல்லாம் தெரியாமல் அப்பா மனங்கலங்கிப் போயிருப்பார். நீ போய் நான் அரண்மனையை விட்டு வெளியேறிய காரணத்தைக் கூறிஞல்தான் அவர் ஒருவாறு மனந்தெளியக்கூடும். போ. போய் நான் அரச வாழ்வை துறந்துவிட்டதாகச் சொல். வீண் மனக்கலக்கங்களுக்கு இடம் கொடாதே!" என்று வற்புறுத்திச் சொன்ன பிறகுதான் தேர்ப் பாகன் அவ்விடத்தைவிட்டு அசைந்தான்.

சாணன் சென்ற பிறகு சித்தார்த்தன் ஆற்றங் கரையிலே தனியாக நின்று கொண்டிருந்தான். ஒரு முறை தன் உடைகளைப் பார்த்துக் கொண்டபோது, தன் புது வாழ்வுக்கு அவை ஏற்றவையல்ல என்ற எண்ணம் பிறந்தது. சிறிது தொலைவில் மரத்தடியில் ஒரு பிச்சைக்காரன் முடங்கிப் படுத்துக் கொண்டிருந்தான். அவனருகே சென்ற சித்தார்த்தன், தன் ஆடைகளைப் பெற்றுக் கொண்டு அவனுடைய ஆடைகளைத் தருமாறு கேட்டுக் கொண்டான்.

அந்தப் பிச்சைக்காரன் மிகுந்த மகிழ்ச்சியோடு தன் கந்தல்களைக் களைந்து கொடுத்தான். அழுக்கடைந்த அந்தக் கந்தல் துணிகளை

வாங்கி அணிந்து கொண்டு சித்தார்த்தன் தன் கால்போன திசையில் நடந்து சென்றான்.

உண்மையைத் தேடிப் புறப்பட்ட அந்த ஒளி மாணிக்கம், பிச்சைக்காரன் உடையுடனும், குன்றாத ஆர்வத்துடனும், உறுதி நிறைந்த உள்ளத்துடனும் கல்லும் முள்ளும் நிறைந்த பாதையெல்லாம் நடந்து காடும் மேடும் கடந்து கங்கைக் கரைக்குப் போய்ச் சேர்ந்தது. கங்கையைக் கடந்து மகத தேசத்தை அடைந்தது. மகத நாட்டின் தலைநகரான ராஜக்கிருகத்திலே இலையினால் தைத்த ஒரு பிச்சைப் பாத்திரத்தைக் கையில் ஏந்தி வீடு வீடாகப் பிச்சை எடுத்துக் கொண்டிருந்தது.



## 3. இன்பநிலை கண்டறிந்த புத்தபிரான்

மகத நாட்டு மன்னன் பிம்பிசாரன். அவன் ஒருநாள் தன் அரண்மனை உப்பரிகை மேலே நின்று கொண்டிருந்தான். அரண்மனை உப்பரிகைமேல் நின்று பார்த்தால் ராஜக்கிருக நகரின் பல பகுதிகளும் கண்ணுக்குத் தெரியும்.

ஒரு பிச்சைக்காரன் வீடு வீடாகச் சென்று பிச்சை யெடுத்துக் கொண்டிருக்கும் காட்சி மகத மன்னன் கண்களிலே தென்பட்டது.

சில வீதிகளிலே பிச்சை யெடுத்த பிறகு, அந்தப் பிச்சைக்காரன் மேற்கொண்டு பிச்சை யெடுக்காமல் நடந்து சென்றான்.

உப்பரிகை மேலிருந்து பார்க்கும்போதே அந்தப் பிச்சைக்காரனைப்பற்றி அறிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் மன்னனுக்கு ஏற்பட்டது. அந்தப் பிச்சைக்காரனைப் பார்க்கும்போது பரம்பரைப் பிச்சைக்காரனைப்

போல் தோன்றவில்லை. ஏதோ ஓர் இலட்சியத்திற்காகப் பிச்சை யெடுப்பவன் போலவே தோன்றினன்.

மன்னன் பிம்பிசாரன் தன் வேலையாட்களில் இருவரை அழைத்தான். பிச்சைக்காரனை சுட்டிக் காண்பித்தான். "அந்த ஆளை அவன் அறியாமல் பின்தொடர்ந்து செல்லுங்கள். அவன் எங்கு தங்குகிறான், என்ன செய்கிறான் என்று அறிந்து வாருங்கள்" என்று கட்டளையிட்டான்.

சில நாழிகைகளுக்குப் பிறகு அந்த வேலைக்காரர்கள் திரும்பி வந்தார்கள். அவர்கள் கூறிய செய்தி பிம்பிசாரன் எதிர்பார்த்தது போலவே யிருந்தது.

"அரசே, அந்தப் பிச்சைக்காரன் நகருக்கு வெளியே உள்ள கல் மலையடிவாரத்திலே நிழல் படர்ந்த ஓர் இடத்திலே உட்கார்ந்தான். தான் பிச்சை எடுத்துவந்த சோற்றைத் தன் எதிரிலே வைத்தான். அதை எடுத்துண்ணப்போகும் போது அவன் பார்வை அந்தச் சோற்றுக் குவியலிலே பதிந்தது. அந்தப் பிச்சைச் சோற்றைக் கண்டதும் ஏற்பட்ட அருவருப்பால் அவன்

முகம் சுளித்ததை நாங்கள் மிக அருகில் நின்றே கண்டோம். சாப்பிடாமல் அதைத் தூக்கி எறிந்து விடுவான் என்றே எண்ணினோம். ஆனால், பாவம்! பசி அதிகம் போலிருக்கிறது. கண்ணை மூடிக்கொண்டு கவளம் கவளமாக அள்ளிப் போட்டு அவ்வளவு சோற்றையும் விழுங்கிவிட்டான். உண்டு முடிந்தபின் நிழலிலே சாய்ந்து படுத்து உறங்கத் தொடங்கினான். நாங்கள் திரும்பி வந்தோம்'' என்றார்கள்.

“பாவம்! அவன் ஓர் அரசனாக இருக்க வேண்டும் அல்லது செல்வச் சீமானாக இருக்க வேண்டும். என்ன காரணத்தினாலோ நாட்டை விட்டு விரட்டியடிக்கப்பட்டவனாக இருக்க வேண்டும். நாளை நானே அவனைப் போய்ப் பார்க்கிறேன்'' என்று சொன்னான் அவன்.

சொன்னபடி அவன் மறுநாள் சித்தார்த்தன் தங்கியிருந்த மலையடிவாரத்திற்குச் சென்றான். சித்தார்த்தனைக் கண்டவுடனே. அந்த மகத மன்னனுக்கு அவன்மேல் ஒரு மதிப்பு ஏற்பட்டது. தொலைவிலிருந்து அவன் செயல் நடை முறைகளைக் கவனித்தபோதே அவனுடைய உயர்குடிப் பிறப்பின் தன்மை புலப் பட்டது.

சித்தார்த்தனே யார் என்று கேட்டுக் கொள்ளாமலே பிம்பிசாரன் அவனுக்கு செல்வமும் நிலமும் தருவதாகக் கூறினன். பிச்சையெடுப்பதை விட்டுவிட்டு நல்வாழ்வு நடத்துமாறு கேட்டுக் கொண்டான்.

பிம்பிசாரன் வேண்டுகோளைக் கேட்ட சித்தார்த்தன், தன்னைப் பற்றிய உண்மைகளைக் கூறினன். கபிலவாஸ்து அரசுரிமையைத் துறந்து, உலகுய்யத் தான் உண்மை தேடிப் புறப்பட்ட வரலாற்றைக் கூறினன். உண்மையை யறியாமல், மாளிகை வாழ்வை நாடப் போவதில்லை என்ற தன் நெஞ்சுறுதியைப் புலப் படுத்தினன். அத்தனையும் கேட்டுக் கொண்டிருந்த மகத மன்னனுக்கு சித்தார்த்தன் மேலிருந்த மதிப்புக் கூடியதே தவிரக் குறையவில்லை. சித்தார்த்தனின் இலட்சிய வேட்கையையும், அந்த இலட்சியத்தில் அவன் கொண்டிருந்த பிடிப்பையும் பிம்பிசாரன் நன்ருகக் கண்டு கொண்டான்.

"ஐயா, தாங்கள் தேடிச்செல்லும் உண்மையைக் கண்டுபிடித்தபின் மீண்டும் தாங்கள் இங்கு வரவேண்டும். அந்த உண்மைவழியில் நானும் தங்களைப் பின்பற்றி நடப்பேன்!" என்று

உண்மையான விருப்பத்தோடு பிம்பிசாரன் கூறினன். பிறகு சித்தார்த்தனுக்கு மேலும் தொல்லை கொடுக்கக் கூடாதென்று அவனைத் தனியே விட்டுவிட்டுத் தன் அரண்மனைக்குத் திரும்பினன்.

சித்தார்த்தன் தங்கியிருந்த இடத்தைச் சிறு கல்மலைகள் சூழ்ந்திருந்தன. அந்தக் கல் மலைகளிலே ஆங்காங்கே குகைகள் இருந்தன. அந்தக் குகைகளிலே சிங்கம் புலிகள் தங்க வில்லை. ஒளி தேடித் தவமியற்றும் முனிபுங் கவர்கள் தங்கியிருந்தார்கள். அவர்கள் அந்த மலைக்காட்டின் இடையிலே அவ்வப்போது நட மாடவும் செய்தார்கள். அவர்களைக் கண்ட சித்தார்த்தனின் உள்ளம் மகிழ்ச்சியடைந்தது. அவர்களின் மூலமாகத் தான் தேடும் உண் மையை அறியலா மென்று எண்ணினன்.

இவர்களிலே அலார முனிவர் என ஒருவர் இருந்தார். அவருடைய ஞானச் சிறப்பின் புகழ் தவசிகளிடையே அதிகமாகப் பரவியிருந் தது. இந்த அலார முனிவரைத் தொடர்ந்து சென்று பணிவிடைகள் புரிந்து அவருடைய சீடனனன் சித்தார்த்தன். விரைவில் அவன்,

தனக்கு ஞான ஒளி தரக்கூடிய தீபம் அலார முனிவரிடம் இல்லை என்பதைக் கண்டு கொண்டான். அவர் காட்டும் பாதையிலே தான் தேடும் உண்மையைக் காண முடியாது என்பதை உணர்ந்து கொண்டான்.

அலார முனிவரை விட்டுப் பிரிந்து உதக முனிவரைத் தொடர்ந்து சென்றான் சித்தார்த்தன். அங்கும் அவனுக்கு ஏமாற்றமே பரிசாகக் கிடைத்தது.

வேறு சில தவசிகள், பட்டினி கிடப்பதாலும் நோன்பியற்றுவதாலும் மன அமைதியைக் காணலாம் என்று கூறினார்கள். எப்படியேனும் உண்மையைக் காண வேண்டும் என்று விரும்பிய சித்தார்த்தன் அந்த முறைகளையும் செய்து பார்க்க முடிவு செய்தான்.

நோன்பியற்றும் முறைகளையும், பட்டினி கிடந்து தவமிருந்து செய்யவேண்டிய கிரியைகளையும் கேட்டறிந்துகொண்டு ராஜகிருகத்தை விட்டுப் புறப்பட்டான். பழைய முனிவர்களையெல்லாம் விட்டுப் பிரிந்து அவன் மிகத் தொலைவு சென்றான்.

கடைசியில் உருவேலங்காடு என்னும் பெரிய வனத்திற்கு வந்து சேர்ந்தான். இருள்

படர்ந்து வளர்ந்த அந்தப் பெருங் காட்டிலே அவன் தன்னந்தனியாக இருந்தான். பயங் கரமான காட்டு மிருகங்கள் இரை தேடித் திரியும் பெருங்காடு அது என்பதைச் சிறிது கூட நினைத்துப் பாராமல் அந்தக் காட்டின் மத்தியிலே பட்டினி கிடந்து தவம்புரியத் தொடங்கினான்.

இறைவனைத் தொழுவதும், சமாதியிலிருப் பதுமாக சித்தார்த்தன் அந்தக் காட்டிலே தன் வாழ் நாட்களைக் கழித்தான்.

தான் தேடும் உண்மையைக் காண வேண் டும் என்ற வேட்கையோடு அவன் பல நாட்கள் தொடர்ந்து பட்டினி கிடந்தான். ஒரு மண்டலம் இரு மண்டலம் என்று அன்னந்தண்ணீர் எதுவு மின்றிச் சமாதியில் இருப்பான். பிறகு குறிப்பிட்ட காலெல்லை வந்ததும் சிறிது பசியாறுவான். சில நாட்கள் சென்ற பின் மீண்டும் சமாதி நிலையில் இருப்பான். இவ்வாறு அரைப் பட்டினியும் முழுப் பட்டினியுமாக ஆறு ஆண்டுகள் கழிந் தன. கூனிக் குறுகி மெலிந்து போனான் சித் தார்த்தன். அவன் உடலில் இருந்த வலுவெல் லாம் தொலைந்தது.

ஆறு ஆண்டுகள் பட்டினி கிடந்தும் தவம் புரிந்தும் அவன் எதிர் பார்த்த உண்மை புலப் படவில்லை. பட்டினி கிடப்பது சரியான வழியல்ல என்ற எண்ணம் தலை தூக்கியது. எனவே அவன் பட்டினி கிடப்பதை நிறுத்தி மீண்டும் வழக்கம் போல் உணவுண்ணத் தொடங்கினான்.

அந்த ஆறு ஆண்டுகளும் சித்தார்த்த னுடன் நான்கு சாதுக்கள் சேர்ந்து திரிந்தார்கள். அவனுடைய மன உறுதியைக் கண்டு அவர் கள் அவனைத் தங்கள் குருவாக எண்ணிக் கொண்டார்கள். தவமியற்றி முடிவில் அவன் பெரு ஞானியாகி விடுவான் என்று அவர்கள் எதிர் பார்த்தார்கள். ஆனால் ஆறே ஆண்டு களில் அவன் பட்டினியிருப்பதைக் கை விட்ட வுடன், உறுதியில்லாத கோழை என்று அவர் கள் எண்ணலானார்கள். எனவே அச் சாதுக்கள் சித்தார்த்தனைப் பிரிந்து சென்று விட்டார்கள். அவர்கள் சென்றது பற்றி சித்தார்த்தன் கவலைப் படவில்லை. எப்படியேனும் தான் தேடும் உண்மையை அறிய வேண்டும் என்று அவன் தன் முயற்சியில் ஈடுபட்டிருந்தான். உண்மை யை அறிவதற்காக அவன் எவ்வளவு கடுமை யான பயிற்சியையும் மேற்கொள்ளத் தயங்க வில்லை.

ஒரு நாள் சித்தார்த்தன் ஆற்றங்கரை யோரமாக நடந்து சென்று கொண்டிருந்தான். அப்போது அவனுக்குத் தன் குடும்பத்தைப் பற்றிய நினைவு வந்தது. சுத்தோதனரின் அன்பு மிகுந்த முகமும், யசோதரையின் அழகுத் தோற்றமும், ராகுலனுடைய பிஞ்சு உடலும் அவன் கண் முன் தோன்றின. ஆனால், இத் தோற்றங்களெல்லாம், தன் இலட்சியத்தைச் சிதைக்கத் தோன்றிய மாயை உருவங்கள் என்று தனக்குத் தானே கூறி நெஞ்சை வலுப் படுத்திக் கொண்டான். அலைந்து அலைந்து அவன் கால்கள் அலுத்து விட்டன. களைப் பாறுவதற்காக ஒரு மரத்தடியில் உட்கார்ந் தான்.

அது ஓர் அத்தி மரம்.

அத்தி மரத்தின் அடியில் உட்கார்ந்த சித் தார்த்தன் சம்மணம் போட்டு உட்கார்ந்து கொண்டான். "என் உடலுக்கு என்ன நேர்ந் தாலும் சரி. இந்த இடத்தை விட்டு எழுந்தி ருக்க மாட்டேன். என் மனத்திற்கு என்று உண்மை புலப்படுகிறதோ அன்று தான் இதை விட்டு நகர்வேன்'' என்று சித்தார்த்தன் தன் மனத்திற்குள் உறுதி செய்து கொண்டான்.

ஆடாமல் அசையாமல் அந்த மரத்தடியி லேயே உட்கார்ந்திருந்திருந்தான். இடையிடை யே மனம் என்னும் குரங்கு பல இடையூறுகளைச் செய்தது. என்னென்னவோ எண்ணங்களை யெல்லாம் அந்த மனக் குரங்கு பற்றித் தாவியது. ஆனால் சித்தார்த்தன் அதை அடக்கி ஆண் டான். உண்மையை அறியும் வரை வேறு எந்த நினைப்பு வந்தாலும் அதை அடக்கி நிற்பதென்ற உறுதியோடு அத்தி மரத்தடியில் அமர்ந்திருந் தான். அவனுடைய உறுதி மனக்குரங்கைக் கட்டிப் போட்டது. எப்படி அவனுடைய உடல் அசையாமல் உட்கார்ந்திருந்ததோ அப்படியே அவனுடைய உள்ளமும் அசையாத நிலையை யடைந்தது. அவன் நெஞ்சில் அப்போது நிலைத் திருந்தது ஒரே நினைப்புத்தான். உலகம் துன்பங் களிலிருந்து விடுதலை யாவது எப்படி? என்று அறியும் ஆசை ஒன்றைத் தவிர வேறு விருப்பம் அவனுக்குக் கிடையாது.

இரவு நேரத்திலே திடீரென்று அவன் உள்ளத்திலே ஓர் ஒளி பிறந்தது. ஆண்டுக் கணக்காக அவன் கேட்டுக் கொண்டிருந்த கேள்விக்கு விடை கிடைத்துவிட்டது. ஆம்! அவன் தேடிய உண்மை புலப்படவும் அவன்

முகம் ஒளிபெற்றுத் திகழ்ந்தது. அந்த ஒளிக்கு ஈடான ஒளியைப் பகலவனிடத்திலும் பார்க்க முடியாது. உண்மை அறிவினால் பிறந்த அந்த இன்ப ஒளிக்கு ஈடேது? இணையேது?

அமைதியாகிய விடுதலையின்பத்தின் திரு ஒளிதான் அந்தப் பேரொளி. வாழ்வுக்கும் சாவுக்கும் காரணமான அந்தரங்கங்களின் உண்மையை அவன் அறிந்து கொண்டான். உலகை இயக்கி நடத்தும் உண்மையும் ஒழுங்கும் மாருத நெறிமுறையின் மருமத்தை அவன் உணர்ந்து கொண்டான்.

ஒவ்வொரு பொருளையும் அதனதன் ஒழுங்குமுறை மாருமல் நடத்தி வருகின்ற ஒரு மாபெரும் சக்தி உலகத்தில் இருக்கிறது. ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் ஒரு காரணமுண்டு. தற்செயலாக எதுவும் நடந்துவிடுவதில்லை. ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் ஒரு விளைவு உண்டு. இந்தப் பிறப்பில் நாம் நடத்தும் வாழ்க்கை, நம் முற்பிறப்பின் நேர் பயனே யாகும். இப்பிறப்பில் நாம் பாவம் புரிந்தால் அதன் பலனை அடுத்த பிறப்பில் அடைந்து துயரடைவோம். உலக வாழ்வில் முழு இன்பம் அடைய முடியாது. உள்ளம் முழுவதும் அமைதியடைந்து, உலக

வாழ்வைத் துறந்து அடையும் இன்பமே முழு இன்பம். அந்த இன்பமே விடுதலை இன்பம். அந்த விடுதலை இன்பத்தின் பெயரே நிர்வாணம். அமைதி நிறைந்த அந்த முழு இன்பத்தை அடைய நாம் முயற்சி செய்துகொண்டேயிருக்க வேண்டும்.

உண்மை விளக்கம் பெற்ற அறிஞர்களை அக்காலத்தில் மக்கள் புத்தர் என்று அழைத்தார்கள். சித்தார்த்தர் வாழ்வின் உண்மையை அறிந்த காரணத்தினால் புத்தர் ஆனார். அவர் அறிவொளி பெற்ற இடத்திலிருந்த மரம் போதி மரம் என்று அழைக்கப் பெற்றது.

அறிவு விளக்கம் பெற்ற அந்த மரத்தடியைவிட்டுச் செல்ல விருப்பமின்றி அதனடியிலே புத்தர் அமர்ந்திருந்தார். ஏழு நாட்கள் தொடர்ந்து மனத்தை ஒருநிலைப்படுத்தி உட்கார்ந்து முழுமை இன்பத்தை அடைதற்குரிய வழிவகைகளை ஆராய்ந்தார். கடைசியில் முழு இன்பம் பெறும் வழிகள் மூன்று என்று அவர் கண்டார்.

முதலாவதாக மனிதன் தன் தீய ஆசைகளை அடக்க வேண்டும். எண்ணம், பேச்சு, செயல்

ஆகிய எதனுலும் அவன் தீய ஆசைகளை வளர்க்கக் கூடாது. ஆசையை அறுத்தாலன்றி விடுதலை கிடையாது.

இரண்டாவதாக மனிதன் தன் வாழ்நாள் முழுவதும் பிறருக்கு நன்மையே செய்ய வேண்டும். தீயன புரிந்தவர்க்கும் நன்மையே திருப்பிச் செய்ய வேண்டும். நன்மையின் காரணமாகவே நன்மை உண்டாகும்.

மூன்ருவதாக மனிதன் எப்போதும் உண்மையே பேசவேண்டும். உண்மைக்கு அழிவே இல்லை.

மக்கள் எல்லோரும் இந்த நெறிமுறைகளை வாழ்வில் மேற்கொண்டால், துன்பங்களிலிருந்து விடுதலையாகி அமைதி நிறைந்த முழு இன்ப நிலையை அடையலாம். எனவே மக்களுக்குத் தான் கண்ட உண்மைகளை எடுத்துரைக்க வேண்டும் என்ற எண்ணம் புத்தருக்கு ஏற்பட்டது.

முன் தன் குருநாதர்களாயிருந்த அலார முனிவருக்கும் உதக முனிவருக்கும் முதலில் இந்த உண்மைகளை எடுத்துரைக்க வேண்டும் என்று புத்தர் எண்ணினுர். ஆனுல் அவர்கள்

அப்போது இறந்துபோய்விட்டனர். பின்னர் உருவேலங் காட்டில் தன் சீடர்களாகத் திரிந்த ஐந்து தவசிகளைத் தேடிச் சென்ருர். அவர் களைக் காசித் தலத்தின் அருகிலே கண்டார். அவர்கள் மீண்டும் புத்த பெருமானைத் தங்கள் குருநாதராக ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை. பட்டினி கிடக்க முடியாமல் தவத்தைக் கை விட்டவர் ஞானியாக முடியாது என்பது அவர்களுடைய நம்பிக்கையாக இருந்தது. எடுத்த எடுப்பில் அவர்களுடைய மூடநம்பிக் கையை புத்தரால் அகற்ற முடியவில்லை. ஆனுல்,. வேறு சிலருக்குத் தான் கண்ட புது உண்மைகளை அவர் விளக்கிக் கூறியபோது, அவர்களும் அறிவு விளக்கம் பெற்றனர்.

புத்தரின் முதல் சீடளுக இருக்கும் பெருமை பெற்றவன் யாசன் என்பவன். அவன் உண்மை விளக்கம் பெற்றவுடன் தன் செல்வங் களையெல்லாம் துறந்து புத்தர் பொன்னடி களையே போற்றி அவரைப் பின்தொடர்ந்து திரிந் தான். புத்த சங்கத்தில் சேருபவர்கள் உலக இன்பங்களில் நாட்டம் செலுத்தக் கூடாது என்று புத்தர் கூறியிருந்தாலும், செல்வங்களைத் துறக்க வேண்டும் என்று கூறியதில்லை. இருந் தாலும், அவர் வழியைப் பின்பற்றிய பலரும்

தங்கள் செல்வங்களைத் துறந்துவிட்டே வந்து சேர்ந்தார்கள்.

நாள்தோறும் புத்தபிரானின் அருள் உரைகளைக் கேட்டு அவர் வழியைப் பின்பற்ற முன்வந்தவர்களின் தொகை பெருகிற்று. ஒரு நாள், புத்தருக்கு பிம்பிசார மன்னனின் வேண்டு கோள் நினைவு வந்தது. உடனே ராஜகிருக நகரத்துக்குச் சென்றார். புத்தர் அறிவொளி பெற்றுத் திரும்பி வந்ததையறிந்த மன்னன் அவருடைய காலடியில் வீழ்ந்து வணங்கினான். தனக்குச் சொந்தமான ஒரு சிறு தோப்பைக் கொடுத்து அதில் புத்த பெருமான் தங்கியிருக்க வேண்டும் என்று அவன் கேட்டுக் கொண்டான். அவன் அன்பு வேண்டுகோளை ஏற்று இரண்டு மாதங்கள் புத்தர் அந்தத் தோப்பில் தங்கினார்.

புத்தர் அங்கு தங்கியது வீண் போகவில்லை. அரச குலத்திற் பிறந்த இரண்டு இளைஞர்கள் புத்தர் சங்கத்தில் சேர்ந்தார்கள். பின் நாளில் அவர்களே புத்த பிரானின் வலது கையாகவும் இடது கையாகவும் விளங்கினார்கள்.

புத்தர் அரண்மனையை விட்டுப் போன நாள் முதலாய் சுத்தோதனர் அடைந்த துயர மும் மனக் கவலையும் சொல்லும் அளவினதன்று.

எத்தனையோ முறைகள் தம் ஆட்களை அனுப்பி மகனைத் திருப்பி அழைத்துக் கொள்ள முயன்றார். முடியவில்லை. தன் மகன் பட்டினி கிடந்து வாடி மெலிந்து போன செய்தி கேட்டு அவர் உள்ளம் உருகித் தவித்தார்.

கடைசியில், புத்தர் வெளியேறிய ஏழாவது ஆண்டில் ராஜகிருகத்தில் அவர் இருக்கும் செய்தி யறிந்தார். தன் மகனை அழைத்து வரும் படி ஆயிரம் ஆட்களுடன் ஒரு செல்வரை அனுப்பினார். சென்றவர்கள் திரும்பி வரவில்லை. இரண்டாம் முறையாக மற்றொரு செல்வரை மேலும் ஆயிரம் ஆட்களுடன் அனுப்பினார். அப்போதும் ஏமாற்றமே. இப்படி ஒன்பது முறை ஆளனுப்பியும் ஒரு பதிலும் கிடைக்கவில்லை. பத்தாவது முறையாக கலா உதயன் என்பவனை அனுப்பினார். கலா உதயன் மிகவும் நம்பிக்கைக் குரியவன்; புத்தரின் விளையாட்டுத் தோழனாக இருந்தான்.

கலா உதயன் ராஜகிருகத்தை யடைந்த போது, முன் ஒன்பது முறை அனுப்பப் பெற்றவர்கள் அனைவரும் புத்த சங்கத்தில் சேர்ந்து விட்டதை அறிந்தான். புத்த பெருமானைக் கண்ட பிறகு அவனும் தன் ஆட்களுடன் புத்த

சங்கத்தில் சேர்ந்து விட்டான். இருந்தாலும் சுத்தோதனரின் பணியையும் அவன் மறந்து விடவில்லை.

புத்த பிரானிடம் பல முறை பேசி அவரை கபில வாஸ்துவுக்கு அழைத்து வந்து விட்டான் இரண்டு மாதம் நடந்து புத்த சங்கத்தினர் கபில வாஸ்து நகரை யடைந்தனர். கோட்டைக்கு வெளியே மரத்தடியில் அமைக்கப் பட்ட குடிசைகளில் தங்கினர்.

சுத்தோதன மாமன்னர் புத்த பிரானைச் சந்திக்க வந்தார். மழுங்க வழித்த தலையும் காவி உடையும், கையில் திருவோடுமாகக் காட்சி யளித்த அவ்வரைக் கண்டு கண் கலங்கினர். கண்ட மாத்திரத்தில் சுத்தோதனர் தம்மையறியாமலேயே கை கூப்பி புத்தபிரானை வணங்கினர்.

ஆயிரக் கணக்கான சீடர்கள் பின் தொடர அருள் ஒளி நிரம்பிய திரு முகத்துடன் தன் மகன் ஒரு பெரும் தெய்வம் போலக் காட்சி யளித்தது சுத்தோதனருக்குப் பெருமையாகத் தான் இருந்தது. ஆனல், அந்தக் காவியுடையும் கைத் திருவோடும் முடியற்ற தலையும் காணப் பொறுக்க வில்லை.

"மகனே அரண்மனைக்கு வந்து விடு" என்று திரும்பத் திரும்ப அழைத்தார். பயன் கிட்டவில்லை.

பின் ஒரு நாள் தன் மகன் தெருத் தெருவாக பிச்சை எடுக்கின்ருன் என்று கேள்விப் பட்டு ஓடோடிச் சென்ருர். "வேண்டாமடா மகனே, வேண்டாம்! ஆளப்பிறந்த நீயா பிச்சை ஏற்பது?" என்று கேட்டுத் தடுத்து நின்ருர். ஆனல், புத்த பிரான் அவர் அன்பழைப்பைப் பொருட்படுத்த வில்லை.

ஒரு நாள் அரண்மனைக்குச் சென்று யசோதரையைக் கண்டு புத்த பெருமான் ஆறுதல் கூறினர். பிறகு தன் குடிசைக்குத் திரும்பி விட்டார். அவர் துறவுக் கோலத்தை அகற்ற யசோதரை செய்த முயற்சிகளும் பயனற்றுப் போயின.

தன் மகன் ராகுலனை யசோதரை புத்த பெருமானிடம் அனுப்பினள். "உன் அப்பாவைப் பார்த்து, 'அப்பா எனக்குப் பட்டம் சூட்டுங்கள்' என்று கேள்" என்று கூறியனுப்பினள். புத்த பிரானே, "நான் கண்ட இந்தத் தெய்வ அரசுக்கு உன்னை இளவரசனகப் பட்டஞ் சூட்டுகிறேன்' என்று மனத்திற்குள் தீர்மானித்

துக் கொண்டு அவனுக்கு உண்மை விளக்கம் செய்தார். ராகுலன் அன்று முதல் அவரின் சீடனுனன்.

சில ஆண்டுகளுக்குப் பிறகு சுத்தோதனர் நோய்வாய்ப்பட்டிருப்பதை அறிந்து புத்தர் அவரைக் காணச் சென்ருர். புத்தரைக் கண்டதும் சுத்தோதனர் மகிழ்ச்சி யடைந்தார். முன் பெல்லாம் தனக்குப் பின் தன் அரசை ஏற்றுக் கொள்ளாமல் மகன் துறவியாகி விட்டானே என்று அவர் வருந்தினர். அப்போதோ, புத்த சங்கத்தில் தம்மையும் சேர்த்துக் கொள்ளும் படி அவர் புத்தபிரானை வேண்டினர். அவ்வாறே புத்த பிரான் சுத்தோதனரைத் தம் சீடராக்கிக் கொண்டார். சில நாட்களுக் குப் பிறகு அமைதியுடன் சுத்தோதனர் உலக வாழ்வை நீத்தார்.

பிறகு பிரஜாபதியும், யசோதரையும் வேறு பல சாக்கிய குலத்துப் பெண்மணிகளும் உலக வாழ்வைத் துறந்து புத்த சங்கத்தில் சேர்ந்தார்கள். அதன் பிறகு புத்த சங்கத்தில் பெண்களுக்கும் இடம் ஏற்பட்டது.

புத்தர் ஊரூராகச் சென்று தாம் கண்ட புதிய உண்மைகளை மக்களுக்கு விளக்கிக் கூறினர். நாள் தோறும் புத்த சங்கம் தழைத்து வளர்ந்தது.

உலகுக்கு ஒரு புதிய ஒளியைக் காட்டிய அந்தத் திருமகன் குசிநாகரம் என்ற ஊரில் நோய்வாய்ப்பட்டு இறந்து போனார். அவர் இறந்த போது அவருக்கு வயது எண்பது.

புத்தபிரான் காட்டிய ஒளி இன்றும் இருக்கிறது; உலகமெங்கும் பரவியிருக்கிறது. அந்த உண்மை ஒளியை நாமும் வழிபடுவோம்.

